## பம்பாய்க் கடிதம் :

# மேயரை பாதித்த மேஜர் வருகை!

●● பிரிட்டிஷ் பிரதமர் ஜான் மேஜரின் பம்பாய் வருகையினால் அதிகம் பாதிக்கப்பட்ட மனிதர் பம்பாய் மேயர் சந்திரகாந்த் ஹண்டோரேதான். தாஜ் ஹோட்டலில் பிரிட்டிஷ் பிரதமருக்கு அளிக்கப்பட்ட விருந்தின் பிரதான மேஜையில், முக்கிய பிரமுகர்களுக்கு இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. பம்பாய் மேயர் ஹண்டோரேவுக்கோ வேறு மேஜையில் இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. கோபமுற்ற மேயர், இனி எந்த அரசு விழாக்களிலும் கலந்து கொள்வதில்லை என்ற முடிவுடன் விருந்தில் கலந்து கொள்ளாமல் வெளியேறி விட்டார்! இவரது இந்த முடிவை அனைத்துக் கட்சிகளும் ஆதரித்தன. பத்திரிகையாளர்களிடம் பேசுகையில், மூன்றாவது முறையாகத் தாம் இந்த முறையில் அவமானப்படுத்தப்படுவதாக மேயர் கூறினார்.


✱ முஸ்லிம்களின் ஹீரோ!

●● இங்குள்ள பெரும்பான்மையான முஸ்லிம்கள் இப்போது வெறுக்கும் கட்சி எது தெரியுமா? காங்கிரஸ்தான்! இனி ஜென்மத்திற்கும் காங்கிரஸ் கட்சிக்கு வோட்டுப் போட மாட்டோம் என்கின்றனர். 'முதலில் அயோத்யாவில் மசூதியை இடிப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இப்போது இங்கு நடக்கும் கலவரத்தையும் ஆரம்பத்திலேயே அடக்காது மெத்தனமாக இருந்து விட்டது நாயக் அரசு!' என்று பொருமுகின்றனர். பி.ஜே.பி., சிவசேனாவைக் கூட இவர்கள் இந்த அளவுக்கு வெறுக்கக் காணோம்! இதில் அதிக லாபம் காணப் போவது ஜனதா கட்சிதான். உண்ணாவிரதம் இருந்து, பாதிக்கப்பட்ட பலரையும் சந்தித்து, அனுதாபத்தோடு அவர்களோடு உரையாடிய வி.பி.சிங்கே இப்போது முஸ்லிம்களின் ஹீரோவாகக் கருதப்படுகிறார். இது எத்தனை நாட்களுக்கு நீடிக்கும் என்பதுதான் தெரியவில்லை.

●● இந்த முறை குடியரசு தினத்துக்காக வழக்கமாகக் கொடி வாங்கும் பல அலுவலகங்களுக்கும் இதர நிறுவனங்களுக்கும் போதிய அளவு கொடிகள் கிடைக்கவில்லை. காரணம், தங்கள் தேசபக்தி பிறருக்குக் குறைந்ததல்ல என்று காண்பித்துக் கொள்ள, முஸ்லிம்கள் நிர்வகிக்கும் காரியாலயங்கள், பள்ளிகள், கடைகள், வீடுகள் போன்ற அனைத்திலும் கொடியேற்று விழா ஜாம்ஜாமென்று நடைபெற்றது. குடியரசு தினத்தன்று பம்பாய், வெகுநாட்களுக்குப் பிறகு அமைதியாக இருந்தது.

●● கலவரத்தால் பாதிக்கப்பட்ட மக்களை ஜே.ஜே. ஆஸ்பத்திரியில் பார்வையிட வந்த முன்னாள் பிரதமர் வி.பி.சிங்கின் வருகையே கலவரத்தில் முடிந்தது. டாக்டர் அதில் சாக்ளா, ஜே. ஜே. ஆஸ்பத்திரியில் ஒரு டாக்டர். இவர் வி.பி.சிங் விஜயத்தின் போது தமது காரை, வழக்கமாக டாக்டர்கள் கார்களை நிறுத்தும் இடத்தில் நிறுத்தினார். அப்போது ஒரு போக்குவரத்து போலீஸ்காரர் அவரிடம், அந்த இடம் வி.ஐ.பி.க்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது என்றும் அதனால் உடனடியாகக் காரை அப்புறப்படுத்தும்படியும் அதட்டிக் கூறினார். அதே ஆஸ்பத்திரியில் டாக்டராக உள்ள தம்மிடம் அந்த போலீஸ்காரர் மரியாதையில்லாமல் பேசியது தவறு என்று சாக்ளா அவரிடம் கூற, வார்த்தைகள் தடித்தன. வேறொரு போலீஸ்காரர் சாக்ளாவை காரிலிருந்து இழுத்து, சட்டையைக் கிழித்தார். மேலும் மூன்று போலீஸ்காரர்கள் சேர்ந்து கொண்டு அவரைத் தரையில் தள்ளி நையப் புடைத்தனர். இவையெல்லாம் நடந்த போது வி.பி. சிங் ஆஸ்பத்திரி டீனின் அறையில் இருந்தார். விஷயம் பரவ, ஆஸ்பத்திரி டாக்டர்கள் டீனின் அறை முன்பு கூட்டமாக அமர்ந்து விட்டனர். குறிப்பிட்ட போலீஸ்காரர்களைத் தண்டிக்க உடனடி நடவடிக்கை எடுக்கக் கோரினர். பிறகு வி.பி.சிங், முதல்வர் நாயக்குடன் ஃபோனில் பேசி, அஸிஸ்டெண்ட் கமிஷனர் வந்து சேர, ஒருவழியாக நிலைமை சரியானது!

✱ மேயரைப் பாதித்த மேஜர்!



\- அம்ருதா பார்த்தசாரதி



# நாடக மேடைக்கு 'குட்பை' சொல்வதேன்?

**முப்பத்தைந்து ஆண்டுகளில் 29 நாடகங்கள் உருவாக்கி, 4000 முறை அவற்றை அரங்கேற்றிய பிறகு, 'சோ'வின் நாடகக் குழு ''விவேகா ஃபைன் ஆர்ட்ஸ் க்ளப்'' நாடக மேடைக்குக் 'குட்பை' சொல்கிறது. ஏன்? 'சோ'வுடன் ஒரு சந்திப்பு :**

● 1955-ல் உருவானது விவேகா ஃபைன் ஆர்ட்ஸ் க்ளப். குழுவிலிருந்தவர்களில் ஏறத்தாழ எல்லோருமே விவேகானந்தா கல்லூரியில் படித்தவர்கள் என்பதால், புதிய நாடகக் குழுவுக்கு இந்தப் பெயர்.

● மேடையிலிருந்து விடைபெற என்ன காரணம்? குழுவில் எல்லோருக்கும் வயதாகி விட்டது. ஆரம்பித்த போது குழுவில் இருந்தவர்களுடைய சராசரி வயது இருபது. இப்போது 56. இப்போது எல்லோருக்கும் பல்வேறு விதமான ''கமிட்மெண்ட்''கள். எல்லோருக்கும் சௌகரியமாய்த் தேதி கிடைப்பதில் சிரமம் இருக்கிறது. எனவேதான் இப்படி ஒரு 'குட்பை' முடிவு.



* 'சம்பவாமி யுகேயுகே' (கடைசியாக நடந்த போது) நாடகத்தில் ஒரு காட்சி

● விவேகா குழுவின் முதல் நாடகம் பகீரதன் கல்கியில் எழுதிய 'தேன் மொழியாள்'. அரங்கேறிய முதல் வருடமே 25 தடவை மேடை ஏறியது. அதுவே அந்தக் காலத்தில் பெரிய சாதனை. பின்னர், மாதம் முப்பது தடவை, தினத்துக்கு நாலு ஷோக்கள் என்றெல்லாம் நாடகம் போட்டதுண்டு. ஆரம்ப நாட்களில், சென்னை சஃபையர் திரையரங்கில் சனி, ஞாயிறு இரண்டு நாட்களிலும் இவர்கள் நாடகம் போட்டிருக்கிறார்கள்.

● முதன் முதலில் சோ எழுதிய நாடகம் ''இஃப் ஐ கெட் இட்''. அப்போது விவேகா குழு ஆரம்பிக்கப்படவில்லை. நாடகத்தை வேறு ஒரு நாடகக் குழுவுக்குக் கொடுத்தார். ஸ்கிரிப்டை அவர்கள் தொலைத்து விட்டார்கள். சோவிடம் வேறு பிரதி இல்லை என்பதால் அப்போதைக்கு அத்துடன் நின்று போய் விட்டது அந்த நாடகம். சோவின் குழுவுக்கு இரண்டாவது நாடகம் தேவைப்பட்ட போது, இஃப் ஐ கெட் இட் நாடகத்தின் கதை ஞாபகம் இருந்ததால், தமது குழுவுக்கு ஏற்றபடி, மீண்டும் நாடகத்தை எழுதி, அரங்கேற்றினார்.

● 'ஈஸ் காட் டெட்?' என்று டைம் பத்திரிகையில் ஒரு கவர் ஸ்டோரி



* சம்பவாமி யுகே யுகே...
(கடைசி மேக்-அப்)

வெளியானது. அந்தத் தலைப்பு சோவை மிகவும் கவர்ந்தது. அந்தத் தலைப்பை வைத்து, ஒரு நாடகம் எழுதி விட்டார்.



● சோவின் நாடகங்களில் பல, ஆங்கிலத் தலைப்புகளையே கொண்டிருக்கும். உதாரணங்கள் : ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு, டோன்ட் டேல் எனிபடி, மைண்ட் சுஸ் எ மங்க்கி, ஒய் நாட்?, மெட்ராஸ் பை நைட்! ஒரு நாடகத்தின் இடையில் பேச அழைக்கப்பட்ட ஒரு பிரமுகர், ''தமது நாடகங்களுக்கு சோ ஆங்கிலப் பெயரே வைக்கிறார்; இது ரொம்பத் தவறு'' என்கிற ரீதியில் விமர்சிக்க, அந்த மேடையிலேயே, ''எனது அடுத்த நாடகத்துக்கு ஆங்கிலத் தலைப்பு வைக்கப் போவதில்லை; ஒரு லத்தீன் தலைப்பு இப்போதே ரெடி!'' என்று சொல்லி 'சோ' அறிவித்ததுதான் ''கோவாடிஸ்''. இதற்கு ''எங்கே போகிறாய்?'' என்று பொருள்.

● கோவாடிஸ் - இதுதான் சோவின் அரசியல் நெடி வீசிய முதல் நாடகம். எம்.எல்.ஏக்களை செமை கிண்டலடிக்கும் இந்த நாடகத்தை அரங்கேற்ற வேண்டிய தினம் வந்து விட்டது. ஆனால், போலீஸ் பர்மிஷன் தரவில்லை. எப்படியும் கிடைத்து விடும் என்ற நம்பிக்கையில், மேடையில் சீன், செட்கள் நிர்மாணித்தாகி விட்டது. நடிகர்கள் மேக்-அப் போட்டுக் கொண்டு தயாராகி விட்டனர். ஆனால், போலீஸ் பர்மிஷன் கிடைத்தபாடில்லை. பிரச்னையை அரங்கத்திலும் அறிவித்தார்கள். ஒருவழியாய் இரவு ஏழே கால் மணிக்கு, அனுமதி கிடைக்க, நாடகம் தொடங்கியது.



* 'முகமதுபின் துக்ளக்' - இனி இந்த வேஷம் இல்லை..

● ''தஞ்சையில், மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்காக ஒருமுறை நாடகம் போடப் போயிருந்தோம். திறந்தவெளி அரங்கு. மழை, பவர்கட் காரணமாக, நாடகம் நடத்துவதில் சிக்கல் ஏற்பட்டது. மாணவர்களிடம், 'லைட் இல்லாமல் திறந்த வெளியில் நாடகம் போட இயலாது. கல்லூரியிலுள்ள ஏதாவது ஒரு பெரிய வகுப்பறையில் நாடகம் போடுகிறோம். பெட்ரோமாக்ஸ் வெளிச்சம் போதும்; மைக் இருக்காது. நீங்கள் அட்ஜெஸ்ட் செய்து கொள்ளுகிறீர்களா?' என்று கேட்டேன். சரி என்று சொன்னது மட்டுமின்றி, நாடக உபகரணங்களை இடம்மாற்றி வைக்க உதவவும் முன்வந்தார்கள். நாடகத்தை நடத்தினோம். மாணவர்கள் தரையில் உட்கார்ந்து, அமைதியாய் இருந்து ரசித்தார்கள்'' என்கிறார் சோ.

● ''இதே போன்ற அனுபவம் ராஜா அண்ணாமலை மன்றத்திலும் ஒருமுறை ஏற்பட்டது. பாதி நாடகத்தில் பவர் கட். மின்சார வாரியத்துக்கு டெலிபோன் செய்ததில், கரண்ட் வராது என்று கூறி விட்டார்கள். திருமணங்களுக்குப் பயன்படுத்தும் பெட்ரோமாக்ஸ் விளக்குகளுக்கு ஏற்பாடு செய்து, நாடகத்தைத் தொடர்ந்தோம். இது போன்ற சமயங்களில் ஆடியன்ஸ் ஒத்துழைப்பு மிகவும் அவசியம். நாடகத்துக்கு காட்சி அமைப்பு முக்கியமில்லை. கருத்து, வசனம், இவைகளே முக்கியம் என்று நான் கருதுவதால்தான் இப்படியெல்லாம் செய்ய முடிகிறது!'' என்று உறுதியாகச் சொல்கிறார் சோ.

● ''ஓர் ஊரில் 'சம்பவாமி யுகே யுகே' நாடகம். நாடகத்தில் புருஷோத்தமன் என்ற லஞ்ச ஊழல் பேர் வழியான அரசு அதிகாரி பற்றிய வசனத்தில், 'வனஜா



● மேக்-அப் அறையில்...

விஹார் என்பதற்குப் பதிலாக, அவன் தன் வீட்டுக்கு லஞ்சா விகார்னு பேர் வைச்சிருக்கலாம்' என்று வரும். இதைச் சொன்னதும் பலத்த கைத்தட்டல்; ஆரவாரம். அப்புறம் தான் எனக்கு விஷயம் தெரிந்தது. அந்த ஊரில் உள்ள லஞ்சப் பேர்வழி அதிகாரியின் பெயர் புருஷோத்தமன். அவர் கட்டிய வீட்டுக்குப் பெயர் 'வனஜா விஹார்' என்று. இது எதேச்சையாய் நிகழ்ந்தது.''

● டெல்லியில் 'முகமது பின் துக்ளக்' நாடகம். நாடகத்தில் அவ்வப்போது, பாராளுமன்றத்தில் இத்தனை பேர் கட்சி மாறி துக்ளக் கட்சியில் சேர்ந்து விட்டார்கள் என்று அறிவிக்கப்படும். அப்படி அறிவிக்கும் போது, ஆளுங்கட்சி பலம் 365 என்ற போது, அரங்கத்தில் ஒரே அப்ளாஸ். காரணம், பாராளுமன்றத்தில் மெம்பர்கள் கட்சி மாறி, ஆளும் இ. காங்கிரஸின் பலம் அன்றைக்கு 365. இதுவும் திட்டமிட்டதல்ல. ஆரம்பம் முதலே நாடகத்தில் பேசப்படும் வசனம்தான்.

● முதல் தடவை மேடையேறிய போது, நாடகத்தில் என்ன வசனமோ, அதை எக்காரணம் கொண்டும் மாற்றுவதில்லை என்பது விவேகா குழுவின் கொள்கை. இதில் ஒரு விசேஷம் என்னவெனில் இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட வசனங்கள் இன்றைக்கும் பொருத்தமாய் இருப்பதுதான். உதாரணமாய், ஒரு டாக்டர், மறதியில் கத்தரிக்கோலை ஆபரேஷனின் போது, வயிற்றினுள்ளே வைத்துத் தைத்து விடுவதாகப் பதினைந்து வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட வசனம், இன்றைக்கும் மிகப் பொருத்தம்!

● 'உறவுகள் இல்லையடி பாப்பா' - பணத்ாசை, எப்படி ஒரு குடும்பத்தைச் சின்னாபின்னப்படுத்துகிறது என்பதுதான் இதன் கதை. இந்த நாடகத்தைப் பார்த்த ஒரு மிகப் பிரபலமானவரின் குடும்பம் திருந்தியதாய் சம்பந்தப்பட்டவர்களே நன்றியுடன் சோவிடம் கூறினார்களாம்.

● காட்சியோ, வசனமோ, ஆபாசமின்றி இருக்க வேண்டும். இது அன்று முதல் இன்று வரை இவர்களது கொள்கை. அதில் கொஞ்சமும் காம்ப்ரமைஸ் செய்து கொண்டதில்லை.

● ''ஒரிருமுறை நான் சில விபரீத பரீட்சைகளைச் செய்து பார்த்ததும் உண்டு'' என்று கூறும் சோ, அத்தகைய இரு சம்பவங்களை நினைவுகூர்கிறார்: ''எங்கள் குழுவில் எல்லோருக்கும் எல்லா நாடகங்களின் முழு வசனமும் மனப்பாடம். எனவே ஒருநாள் ஒரு குறிப்பிட்ட நாடகத்துக்குச் சீட்டுக் குலுக்கிப் போட்டு, யார் யாருக்கு எந்த ரோல் வருகிறதோ, அந்த ரோலில் அன்றைய தினம் அவர் நடிக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். என் சகாக்கள், 'உனக்கென்ன பைத்தியமா?' என்றார்கள். 'எந்த ரோலையும் நம்மில் எவரும் ஏற்றுச் செய்யும் திறமை நமக்கு உண்டு என்பதை நிரூபிப்போம்' என்றதும், அனைவரும் அரை மனதுடன் ஒப்புக் கொண்டனர். சீட்டு குலுக்கல் நடந்தது. ஒருவருக்காவது வழக்கமாகச் செய்கிற ரோல் வரவேண்டுமே! நான் அத்துடன் நிற்காமல், ஆர்க்கெஸ்டிரா குழுவினருக்கும் சீட்டுக் குலுக்கிப் போட்டதில், ஒவ்வொருவருக்கும் தமது வழக்கமானது அல்லாமல், வேறு இசைக் கருவி வாசிக்கும் படி ஏற்பட்டது. எனக்கு மட்டும் தைரியம் இருந்தாலும், மற்றவர்களுக்கெல்லாம் உள்ளூர பயம். முதல் சீனில் சிறு குளறுபடி ஏற்பட்டது. மொத்தப் பேரும் ஆடிப் போய் விட்டார்கள். அன்று எப்படியோ, நாடகத்தை ஒப்பேற்றினோம். அப்போதே, 'இனி இதுபோன்று விபரீதமான காரியம் எதுவும் செய்வதில்லை' என்று தீர்மானித்துக் கொண்டேன்!''

● இன்னொரு சம்பவம் : ''ஒரு கோவிலுக்கு நிதிதிரட்ட உதவியாக நாடகம் போட ஒப்புக் கொண்டோம். எங்கள் குழுவைச் சேர்ந்த ஒருவர் அவசரமாக ஊருக்குப் புறப்பட வேண்டியிருந்ததால், ஒவ்வொரு காட்சியிலும் ஒருசில வசனங்களை நானே 'எடிட்' செய்து, நாடகத்தைக் கால் மணி நேரம் முன்னதாக முடிப்பது என்று தீர்மானித்துச் சுருக்க ஆரம்பித்தேன். விளைவு, ஒன்னரை மணி நேரத்துக்குள் நாடகம்













முடிந்து விட்டது! நாடகத்துக்கு ஏற்பாடு செய்தவர்கள் 'கோவில் நிகழ்ச்சி என்பதால் உங்களுக்கு இளக்காரமா?' என்று கடுமையாய்க் கோபித்துக் கொண்டார்கள். நானும் என் தவறை உணர்ந்தேன். 'இன்னொரு முறை அதே நாடகத்தை எங்கள் செலவிலேயே போடுகிறோம்; மறுபடியும் டிக்கெட் விற்று, கிடைக்கிற பணம் முழுவதையும் கோவிலுக்கு எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கூறிவிட்டு, அதன்படியே நடத்தியும் கொடுத்தோம்.''

● ''நாங்கள் போட்ட நாடகம் முழுவதும் பொழுதுபோக்கு அடிப்படையிலானதுதான். ஆனாலும், அவற்றில் அரசியல், சமுதாய பிரச்னைகள் பற்றி அலசியிருக்கிறோம். எங்கள் நையாண்டித்தனமான நாடகங்களை, எப்போது பார்த்தாலும் ரசிக்கும்படியான சூழ்நிலையில் அரசியலை நடத்திக் கொண்டிருக்கும் அரசியல்வாதிகளுக்கு நாங்கள் ரொம்ப நன்றிக் கடன்பட்டவர்கள்!''

● சோவுக்கும் சென்டிமெண்ட் உண்டு! என்ன தெரியுமா? நாடக ஸ்கிரிப்ட் எழுதுவதற்கு, மைலாப்பூரில் உள்ள காளத்தி கடை என்கிற ஸ்டேஷனரி கடையில்தான் நோட்டுப் புத்தகம் வாங்குவார். நேரே கபாலீஸ்வரர் கோவிலில் கொண்டு போய் வைத்து, நமஸ்காரம் செய்து விட்டு வந்து எழுதத் தொடங்குவார். குறைந்தது இரண்டு நாட்கள். அதிகபட்சம் நாலு நாட்கள். நாடகம் தயாராகி விடும். மறுபடி கபாலீஸ்வரர் கோவிலுக்கு வந்து சந்நிதியில் வைத்து நமஸ்காரம். பிறகு ரிகர்சல், அரங்கேற்றம். முன்பு மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸில்தான் அரங்கேற்றம் இருக்கும். கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் தொடங்கப்பட்ட பிறகு அங்கேதான்.

● ''இனி நாடக மேடைக்கு 'குட்பை' சொல்லி விடுவது என்கிற முடிவை எடுத்தது நான்தான். முதலில் குழுவிலுள்ள அனைவரும் சந்தோஷமாகவே ஒப்புக் கொண்டார்கள். ஆனால், எங்கள் நாடகம் நடிக்கப்படுவது இதுதான் கடைசி முறை என்பதால் வரும் கூட்டத்தைப் பார்த்தும், எதற்காக 'குட்பை' சொல்கிறீர்கள் என்று கேட்கும் போன்கால்களைப் பார்த்தும் எங்கள் குழுவிலுள்ளவர்களுக்கு இப்போது நாடக மேடையைப் பிரியப் போகிறோமே என்கிற எண்ணம் ஏக வருத்தத்தைத் தருகிறது!'' என்கிறார் சோ.

சந்திப்பு : கலாமூர்த்தி,
எஸ். சந்திரமௌலி
அட்டை வண்ணப்படமும்
படங்களும் : கோபிநாத்


ஜெ.
நீங்க அந்தப்பக்கம் வெளுத்து வாங்குங்க... நான் இந்தப்பக்கம் கவனிச்சுக்கறேன்!...
நரசிம்மராவ்
அர்ஜுன் சிங்


இதுதாண்டா எங்க ஜனநாயகம்!....
சட்டமன்றத்தில் பிரதான எதிர்க்கட்சி (இ. காங்.)


இதனால், சகலமான பேருக்கும் ஒருமைப்பாடு கருதி நான் அருள்வது என்னவென்றால்... முஸ்லீம்களுக்கு கிறிஸ்துவர்களுக்கு, பௌத்தர்களுக்கு, ஹிந்துக்களுக்கு, குழப்பம் வராது...




# கல்கி





1993
பிப்ரவரி 21
மலர் : 51
இதழ் : 30
ஆங்கீரச
மாசி 10


## அர்ஜுன்சிங்கின் ஆபத்தான அரசியல்!

அயோத்தியில் பாபர் மசூதி இடிக்கப்பட்டதும் ஏற்பட்ட அதிர்ச்சியில் பி.ஜே.பியின் செல்வாக்கு மளமளவென்று சரிந்தது. ஆனால் தொடர்ந்து சில பல இயக்கங்களுக்கு விதிக்கப்பட்ட தடைகள், பி.ஜே.பி. ஆண்ட மாநிலங்களில் அரசுகள் டிஸ்மிஸ் ஆனது ஆகியன காரணமாக, பி.ஜே.பியின் செல்வாக்கு மறுபடி உயரத் தொடங்கியது. இதற்கான புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர் அர்ஜுன்சிங். அவருடைய பிடிவாதம் இத்துடன் நிற்கவில்லை. தொடர்ந்து பிரதமருக்கு தர்மசங்கடத்தை ஏற்படுத்தி வருகிறது. பாபர் மசூதியைக் காக்கும் பொறுப்பைக் காங்கிரஸ் கட்சியும் ஆட்சியும் சரிவர நிறைவேற்றவில்லை என்பதை வெள்ளை அறிக்கை எடுத்துக்காட்ட வேண்டும் என்பது அர்ஜுன்சிங்கின் அந்தரங்க ஆசை. அதாவது, பிரதமர் தமது திறமை இன்மையைத் தாமே ஒப்புக் கொண்டு கையெழுத்துப் போட வேண்டும் என்று சொல்லாமல் சொல்கிறார்! பி.ஜே.பியின் நம்பிக்கை துரோகத்தை விட இதுதான் அர்ஜுன்சிங்குக்கு முக்கியமாகப்படுகிறது! பிரதமரைப் பலவீனப்படுத்தவும் அவமானப்படுத்தவும் அவர் நடத்திய இந்த திட்டமிட்ட நாடகம் வெற்றி பெறாமல் போகவே, வெள்ளை அறிக்கை தயாரிக்கும் துணைக் கமிட்டியிலிருந்து ராஜினாமா செய்து துணை நாடகம் போட்டார். இந்த நாடகமும் பிசுபிசுத்து விட்டது.

பி.ஜே.பி.யையும் இதர மதச் சார்புள்ள இயக்கங்களையும் காங்கிரஸ் தீவிரமாக எதிர்க்க வேண்டும்; மெத்தனம் காட்டக் கூடாது என்பது அர்ஜுன்சிங் அரங்கேற்றியுள்ள லேட்டஸ்ட் ருத்ர தாண்டவம்! மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது இந்தக் கோரிக்கை அர்த்தமுள்ளதாகத் தோன்றும். ஆனால் கூர்ந்து நோக்கினால் இது காங்கிரஸ் தனக்குத்தானே தூக்குக் கயிறு திரித்துக் கொள்வது போலத்தான் என்பது புரியும். ஏனெனில் பி.ஜே.பி.யையும் இதர இந்து இயக்கங்களையும் தீவிரமாக எதிர்ப்பது என்பது காங்கிரஸை இந்துக்களின் விரோதியாகச் சித்திரித்து விடும். முஸ்லிம்களின் வோட்டுக்களைப் பெறுவதற்காக ஹிந்துக்களை ஒட்டுமொத்தமாகப் பகைத்துக் கொள்வதாகி விடும். எனவே மிக ஜாக்கிரதையாகக் காங்கிரஸும் அதன் தலைவரும் செயல்பட வேண்டும். தீவிரவாதத்தை மற்றொரு தீவிரவாதம்தான் எதிர்க்க முடியும் என்பதல்ல. மிதவாதமும் எதிர்த்து நின்று வெற்றி பெற முடியும். சூழ்நிலையைச் சரியாகப் புரிந்து கொண்டு சாமர்த்தியம் காட்ட வேண்டும்.

'மதச் சார்புள்ள கட்சிகள், இயக்கங்கள் தேர்தலுக்கு நிற்பதையும், இதர கட்சிகளுக்கு உதவுவதையும் தடைசெய்து சட்டம் கொண்டு வரலாம்' என்ற அர்ஜுன்சிங்கின் யோசனை சரியானது. (தடை, இயக்கங்களுக்கு அல்ல; அவை தேர்தலுக்கு நிற்பதற்கும் உதவுவதற்கும் மட்டுமே) இதனைப் பிரதமர் பரிசீலிக்கலாம். அதே போல் பிரதமரின் மிதவாதப் போக்கில் என்ன சாணக்கியம் இருக்கிறது என்று அர்ஜுன்சிங் பரிசீலித்து அந்தப் போக்கிலேயே மேலும் நல்ல யோசனைகள் கூறலாம். இப்படி ஒருவரை ஒருவர் அனுசரித்துப் போய் கட்சியையும் நாட்டையும் காக்க வேண்டுமே தவிர, 'யார் பெரியவன்? நீயா, நானா? பார்த்து விடலாம் ஒரு கை' என்ற போக்கில் சென்றால் தேசத்தைக் கைவிட்டவர்களாகி விடுவார்கள். உட்கட்சி ஜனநாயகம் நல்லதுதான்; ஆனால் அது குழாயடி தெருச் சண்டையாக மாறி விடாமல் அர்ஜுன்சிங் நிதானம் காட்ட வேண்டும்.

ஒரு பக்கம் அர்ஜுன் சிங்கினால் ஆபத்து என்றால் மறுபக்கம் ஜெயலலிதாவின் போக்கினாலும் நரசிம்மராவ் ஆட்சிக்கு ஆபத்து ஏற்பட்டுத்தான் இருக்கிறது. சட்டமன்ற காங்கிரஸ் கட்சியை முதல்வர் கிண்டல் செய்வதும், பிரதான எதிர்க்கட்சியான காங்கிரஸ், குண்டுக்கட்டாக சட்டமன்றத்திலிருந்து வெளியேற்றப்படுவதும் கசப்புணர்வுகளை ஓர் உச்சத்துக்கு வளர்த்து விட்டன. என்னதான் பிரதமர் தூதர்களை அனுப்பி சமரசத்துக்கு முயன்றாலும் முறிந்த உறவுகள் மறுபடி ஒட்டுமா என்பது சந்தேகமே. அதைக் காட்டிலும் பிளவுபட்ட தமிழக காங்கிரஸ் இணைவதே கஷ்டம்; இயல்பும் கூட.

இங்கே பொறுப்பு வாய்ந்த நல்ல எதிர்க்கட்சியாக காங்கிரஸை இயங்க விடுவதும் அதே நேரத்தில் மத்தியில் நரசிம்மராவ் ஆட்சியை விமர்சிக்கும் போதே அது வீழ்ந்து விடாமல் காப்பதும்தான் அ.தி.மு.க.வுக்கும் அதன் தலைவிக்கும் கௌரவம். யாருடைய செல்வாக்கால் யார் தேர்தலில் வென்றார்கள் என்று வாதாடுவதை விட, 'இருவரும் சேர்ந்து நின்றுதான் மக்களிடம் வோட்டுப் பெற்றோம்' என்பதை நினைவில் கொள்வது நாட்டுக்கு நல்லது.

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. -பாரதியார்.

## 1993. AND IN A WAY, WE'RE STILL A JOINT FAMILY.

Different people. Different likes. Different opinions. But surprisingly, when it comes to investments, we've always thought alike. And taken a joint-family decision to deposit with the Investment Trust of India (ITI).

A tradition started by my grandfather, and one that makes even better sense in these uncertain and volatile times.

With good reason. For over 45 years ITI has inspired trust with prompt service. And the extras they offer you make a lot of difference.

For instance, they offer a free tax-consultancy service*. And my deposit with ITI made me eligible for preferential allotment of shares in the company.

All of which explains why we've always chosen to renew our deposits with ITI. It's a tradition that's done



# THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

*An H.C. Kothari Group Company*

"Mashkur Buildings", 1 Krishnama Road, Nungambakkam, Madras 600 034. Tel: 476297, 474871, 474885, 471691

**Free tax consultancy for deposit holders in Madras city only. Please call the F.D. Department on 476297 for an appointment.**

* ITI is not responsible for any liabilities arising out of this tax consultancy service.

**ICRA RATING MAA—INDICATING HIGH SAFETY**

## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the Administrative Office and other branch offices of the Company.

### DEPOSIT SCHEMES:

| CUMULATIVE DEPOSIT SCHEME Period | Minimum Rs. 1000 and in multiples of Rs. 1000 25 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|
| For Rs. 1000 deposit amount payable on maturity | Rs. 1,364 | Rs. 1,584 | Rs. 1,815 | Rs. 2,107 |
| Effective annual yield | 17.74% | 18.80% | 20.37% | 22.14% |

**FIXED DEPOSIT SCHEME**

| Period in Months | Rate of Interest per annum |
|---|---|
| 25 | 15% Monthly |
| 36 | |
| 48 | |
| 60 | |

**RECURRING DEPOSIT SCHEME**

| Period in Months | Rate of Interest per annum | Maturity value for Rs. 100 |
|---|---|---|
| 25 | 15% Monthly Compounding | Rs. 2,950 |
| 36 | | Rs. 4,568 |

1. Interest warrants payable at par at all branches of S.B.I.
2. As per RBI Directives for repayment before maturity:
   (a) No interest will be paid upto 12 months (b) Above 12 months, 11% interest will be paid (c) Above 24 months, 1% less than the contract rate will be paid.
3. As per RBI directives, deposits will be repaid before maturity only after 6 months from the date of deposit.

Information required to be specified as per Non-Banking Financial Companies (Reserve Bank) Directions 1977, and Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules 1977, are given below:

(a) Name of the Company: THE INVESTMENT TRUST OF INDIA LIMITED. (b) Date of incorporation: 2nd August, 1946. (c) Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any: Business: Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc. The Company has no subsidiaries. Branches: New Delhi, Bombay, Bangalore, Mysore, Hyderabad: Vizag, Nellore Trivandum, Cochin, Kottayam, Calicut, Pondicherry, Tirunelveli, Trichy, Coimbatore, Nagercoil, Madurai, Salem, Erode, Thanjavur, Vellore, Dindigul, Tuticorin, Hubli, Rajkot, Surat. (d) Brief particulars of the management of the Company: The Company is managed by the Chairman & Managing Director under the control and supervision of the Board of Directors.

(e) Name, address & occupation of the Directors

Mr. B.H. KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11,"Nungambakkam High Road, MADRAS 600 034. Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858 Poonamalle High Road, Kilpauk, MADRAS 600 010. Business Executive & Management Consultant. Mr. G.K. SUNDARAM "Rasakunlalu", Circuit House Road, COIMBATORE 641 018. Industrialist. Mr. G. CHIDAMBAR 101-A, Janakpuri, 2nd St., Off: Velachery Road, MADRAS 600 032. Former Managing Director - L I C. Mr. N. SRINIVASAN T-18, Sixth Avenue, Besant Nagar, MADRAS 600 090, Chartered Accountant. Mr. RAM GANAPATI No. 27, "Ashoka Crescent", D.L.F. Kutab Enclave Phase - I, Gurgaon, HARYANA 122 001, Former Chairman of B I F R. Mr. C.R. RAMAKRISHNAN "Meenakshi", No.4, Sir. P.S. Sivasamy Road, Mylapore, MADRAS 600 004, Former Joint Managing Director of Larsen & Toubro Ltd., Mr. M.R. SHAH 23/24, Woodlands Apartments, Peddar Road, BOMBAY 400 026. Business.

| (f) Profits of the Company before and after making provisions for tax for the three financial years immediately preceding the date of advertisement | | | | (g) Dividend declared by the Company in respect of the said year. (Rupees in lakhs percentage) | |
|---|---|---|---|---|---|
| | Profit before depreciation and taxation (Rupees in lakhs) | Profit before taxation | Profit after taxation | Amount | Percentage |
| 31.3.92 | 312.81 | 187.44 | 163.19 | 56.10 | 28 |
| 31.3.91 | 256.00 | 150.13 | 150.13 | 36.81 | 25 |
| 31.3.90 | 199.90 | 87.90 | 72.90 | 36.81 | 25 |

| LIABILITIES | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-1991 | ASSETS | 31-3-92 (Rupees in lakhs) | 31-3-91 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 217.10 | 147.25 | Fixed Assets | 1071.26 | 1176.73 |
| Reserves & Surplus | 877.50 | 444.05 | Investments | 123.86 | 88.41 |
| Secured Loans | 1074.11 | 1663.15 | Current Assets, Loans and Advances | 4793.06 | 4182.87 |
| Unsecured Loans | 2332.05 | 1816.28 | Miscellaneous Expenditure | 15.24 | 9.95 |
| Current Liabilities | 1396.80 | 1232.84 | | | |
| Provisions | 105.88 | 103.29 | | | |
| | 6003.43 | 5406.96 | | 6003.43 | 5406.96 |

Note: Contingent Liability not provided for: (i) On partly paid Shares and Debentures: Rs. 49,475 (ii) Sales tax on lease contracts under writ petitions: Rs. 20,34,009 (iii) Commitments in respect of contracts to be executed on capital account (since discharged): Rs. 8,12,000 (i) The amount which the Company can raise by way of deposits under Reserve Bank of India directions: Rs. 87.93 Crores. Aggregate of deposits actually held on the last day of the immediately preceding financial year, viz. 31.3.1992: Rs. 20.40 crores. (j) The Company has no overdue deposits other than unclaimed deposits. (k) It is hereby declared that (i) The Company has complied with the applicable provisions of the directions. (ii) The compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India and (iii) The deposits accepted by the Company are unsecured and rank pari passu with other unsecured liabilities.

The above text of this advertisement has been approved by the Board of Directors on 29.5.92.

(By Order of the Board)
For THE INVESTMENT TRUST OF INDIA LIMITED

V. Parthasarathy Secretary

Regd. Office:
"Kothari Buildings"
117, Nungambakkam High Road,
Madras 600 034.

Note: A copy of this text duly signed by a majority of the Directors of the Company has been filed with Reserve Bank of India, Bangalore.

**Deposits can be made at all our branches**

# பரிசு ரூ. 250

## திணறடிக்கும் பிரமுகர்கள்

இந்த வாரம் திணறடிப்பவர்கள் அரசியல்வாதிகள் மட்டும் அல்ல - வேறு சில பிரமுகர்களும் கூட பகுதியளவே முகம் காட்டித் திணறடிக்கிறார்கள்!

கார்ட்டூன்களை வரைந்துள்ள ஓவியர்கள் யார் யார்?

இடம்பெற்றுள்ள பிரமுகர்கள் யார்? (வரிசைப்படி குறிப்பிடுங்கள்)

கூப்பனை பூர்த்தி செய்து கத்தரித்து கல்கி அலுவலகத்துக்கு அனுப்புங்கள்.

கடைசித் தேதி : 3.3.93

உறை மீது 'திணறடிக்கும் பிரமுகர்கள்' எனத் தவறாமல் குறிப்பிடவும். எல்லா விடைகளையும் சரியாக எழுதும் ஒருவருக்கு ரூ 250 பரிசு. ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் பரிசு சமமாகப் பகிர்ந்தளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடை எழுதும் பட்சத்தில் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் பத்து வாசகர்களுக்கு மட்டும் பரிசுத் தொகை சமமாகப் பிரித்தளிக்கப்படும்.

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

1



2



3



4



5



ஓவியர்கள் : 1.................................... 2....................................

3.................................... 4....................................

பிரமுகர்கள் : 1.......................... 2.......................... 3..........................

4.......................... 5 ..........................................

என் பெயர் : ..........................................................

விலாசம் : ..........................................................

..........................................................

# Vமர்சனம்

●● பிறந்தால் கால்பந்தாட்டக்காரனாகப் பிறக்க வேண்டும்! மத்திய அமைச்சர் களாகட்டும் மற்றவர்களாகட்டும் - நமது மாண்புமிகு முதல்வரின் தரிசனத்திற்காகப் படாதபாடுபடுகிற வேளையில், அவர் நேரு கோப்பையை வென்ற கொரியர்களுக்காக, சரியாக ஒரு மணி நேரம் முகத்தில் ஒட்டிவைத்த புன்னகையுடன் காத்திருந்து, பரிசளித்தாரே! புரட்சித் தலைவியின் பெருமை, கொரியர்களுக்கும் தெரிந்தே இருக்கிறது. கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் அவர்கள், கையைப் பிடித்து குலுக்கோ குலுக்கென்று குலுக்கினதென்ன, முத்தம் கொடுத்து மகிழ்ந்ததென்ன... டீ.வி.யில் தான் பார்க்கக் கிடைக்கும்.

●● அண்ணாவின் நினைவு நாளை முன்விட்டு, அவரது கதை ஒன்றை, போன செவ்வாய் இரவு நாடகமாக்கியிருந்தார்கள். வழக்கம் போலவே, 'காலம்' வருஷக்கணக்கில் உருண்டபடிக்கு இருந்தது. (பாத்திரங்கள் மட்டும் என்றும் 16) எம்.பி.ஸ்ரீனிவாசன் இசைக் குழுவினரைப் போல, நடிகர்கள் வரிசைக்கிரமமாக நின்று வசன சப்ளை செய்தனர். அண்ணாவுக்கு வெறும் மலர் அஞ்சலியே போதுமே!


● அண்ணா : மலர் அஞ்சலி போதுமே

●● வரவர பிபிஸியை எப்போது 'ஆன்' பண்ணினாலும் கிரிக்கெட் கமெண்ட்ரி போல ஏதாவது போர்க்கள ரிப்போர்ட் வந்தபடியே இருக்கிறது. சென்ற வாரம் அதிகம் போஸ்னியா போரும், நாடு கடத்தப்பட்ட நானூறு

**மலர் அஞ்சலி மட்டும் போதுமே!**

பாலஸ்தீனியர்களின் சோகமும். நானூறு பாலஸ்தீனியர்களும் வெட்டவெளியில் நமாஸ் பண்ணுகிறார்கள். சந்தோஷமாக கக்கா ரொட்டி கட்டுச் சாப்பிடுகிறார்கள். இடையிடையே 'We are human beings too' என்று கோஷம் போடுகிறார்கள். போஸ்னியா கலவரத்தில், பெண்கள் மானத்துக்குப் போராடுகிறார்கள். 'தலைவன் ஆணையிட்டதால் அந்தப் பெண்ணை பலாத்காரம் பண்ணினேன்' என்று ஒரு சோல்ஜர் ஸ்டேட்மெண்ட் விடுகிறான். கல்கி அவதாரத்துக்குக் கூடிய சீக்கிரம் நாள் குறிக்கப்படலாம்.

●● ஞாயிறு படம் நியாயத் தராசு. எம்.டி.வாசுதேவன் நாயரின் ஒரு புரட்சிப் பெண் பற்றின கதை. பு. பெண்ணாக ராதா. இரண்டு முறை துப்பாக்கி தூக்கினது தவிர ஒன்றும் புரட்சி பண்ணவில்லை. கலைஞர் வசனம் என்று நிமிர்ந்து உட்கார்ந்ததில், முதுகுவலி கண்டதுதான் மிச்சம்.

●● திரைப் படத்தின் முடிவில், 'This... Our Heritage' என்று நம் கிராமியக் கலைகள் பற்றின என்.சி. ராஜாமணியின் டாக்குமெண்ட்ரி படம். சுஜாதா உள்ளிட்ட ஒரு பெரும் கோஷ்டியே இந்தத் தயாரிப்புக்குப் பின்னால் இயங்கியிருக்கிறது. குறிப்பிடும்படியான, சுவாரஸ்யம் வாய்ந்த நிகழ்ச்சி. நாடக பாணியில் சில பெண்களும் ஆண்களும் இதுகுறித்து சிலாகித்துப் பேசியதற்குப் பதிலாகப் பின்னணியில் மெல்லிய கமெண்ட்ரி மட்டும் கொடுத்திருந்தால் சிறப்பு முழுமையடைந்திருக்கும்.


● கலைஞர் : புரட்சியைக் காணோம்

●● 'ஸ்டார்+'ல் வியாழனன்று 'Beyond 2000' என்றொரு சுவாரஸ்ய நிகழ்ச்சி. அறிவியல் முன்னேற்றத்தில் சில ஆச்சர்ய சமாசாரங்கள். ஒரு கார். டிரைவர் இல்லாமல் தானே ஓடுகிறது! வளைவுகளில் தானே ஸ்டியரிங்கைத் திருப்பிக் கொள்கிறது. விபத்து ஏற்பட வாய்ப்பே இல்லாமல் முன், பின் செல்லும் வாகனங்களிலிருந்து போதிய இடைவெளியைத் தானே ஏற்படுத்திக் கொள்கிறது!

இதே ரீதியில் தானாகவே கையெழுத்துப் போட்டு, 'மூவ்' பண்ணிக் கொள்கிற அரசாங்கக் கோப்புகள், காலி ஆக ஆக, தானாகவே நிரம்பிக் கொள்கிற கஜானா, இந்த மாதிரி 'தானாகவே' சௌகர்யம் ஏற்படுத்தக்கூடிய விஷயங்களை லிஸ்ட் எடுத்து, ஒரு பக்கம் கார்ட்டூனுக்கு ஐடியா கொடுக்க 'ஜூலி'யை அழைக்கிறேன்!

– கிச்சா

# நேரத்தை வசப்படுத்து; வெற்றி உன் கையில்!

"நேரமில்லை! நேரமில்லை!" என்று புலம்புகின்றோமே தவிர, கிடைக்கின்ற நேரத்தை நல்லபடியாகப் பயன்படுத்துவதில்லை. இழந்த நேரத்தை நாம் திரும்பப் பெற முடியாது. ஆகவே, கிடைக்கின்ற நேரத்தையும், வாய்ப்பையும் நாம் நிரம்படப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நேரத்தைச் சேமிக்க இதோ சில எளிய வழிகள்!



● நாளை செய்ய வேண்டியுள்ள வேலைகளை இன்றே திட்டமிட்டுக் குறித்துக் கொள்ளுங்கள். எந்த வேலைகள் முக்கியமோ அவற்றை முதலிலும், மற்றவைகளைப் பிறகும் எழுதுங்கள். மறுநாள் காலை அவற்றை வரிசைப்படி நிறைவேற்றுங்கள். நேரமும் மிச்சமாகும்; அதே சமயத்தில் எந்த வேலையும் விடுபட்டுப் போகாது.

● காலத்தைக் கடத்துவதற்காக ஒரு போதும் வேலை செய்யாதீர்கள். "இன்று முடித்தே ஆக வேண்டும்" என்று எண்ணியே வேலை செய்யுங்கள்.

● அலுவலகங்களில் நேரிலோ அல்லது போனிலோ பேசும்போது சுருக்கமாகப் பேசிப் பழகுங்கள். இதனால் நமக்கும் நேரம் மிச்சம்; உயர் அதிகாரிகளும், நண்பர்களும் மகிழ்ச்சி அடைவர். மேலும் உங்களிடம் போனில் அல்லது நேரில் பேசுவதற்காக வேறு சிலர் காத்திருக்கக்கூடும்.

கே. விஸ்வநாதன்

● கடிதங்களைச் சுருக்கமாக எழுதுங்கள்; இதனால் உங்களுக்கும், படிப்பவர்களுக்கும் நேரம் மிச்சம். எல்லாவற்றிற்கும் மேலாகக் கடிதங்கள் சுருக்கமாக இருந்தால் குழப்பங்களும், சந்தேகங்களும் வராது.

● அலுவலகத்திலும் சரி, வீட்டிலும் சரி, நண்பர்களுடன் வீண் அரட்டைக்கு உட்கார வேண்டாம். அந்த நேரத்தில் உபயோகமான சில வேலைகளைச் செய்யலாமே!

● காலந்தவறாமையில் (Punctuality) சிறிது அக்கறை காட்டுங்களேன்! ஏனெனில் காலம் தாழ்த்திச் செய்கின்ற வேலை சில சமயங்களில் தக்க பலனைத் தராது.

● ஓய்வு நேரத்தில் செய்தித்தாள்கள் மற்றும் வார இதழ்களைப் படியுங்கள். அல்லது பயணத்தின் போது படித்து முடித்து விடுங்கள்.

● எந்தப் பொருளை எடுத்தாலும் உபயோகித்த பின்னர் அதனதன் இடத்திலே அவற்றை வைத்து விடுங்கள். மறுபடியும் தேவைப்படும் போது சுலபமாக எடுக்கலாம். தேடித் தேடியே நேரத்தை வீணாக்க வேண்டாமே!

● கடிதங்களை எழுதியவுடன் அதே நாளில் தபாலில் சேர்த்து விடுங்களேன்! தாமதம் பின்னர் பல இடையூறுகளை விளைவிக்கக்கூடும்.

● தினந்தோறும் ஷாப்பிங் செல்வதைத் தவிர்த்து விடுங்கள். நேரமும் மிச்சம்; கூடவே பணமும் மிச்சம்.

● எந்த நேரத்தில் எந்த வேலையைச் செய்ய வேண்டுமோ அதை முதலில் செய்யுங்கள். கடைசி நேர அவசர வாழ்க்கை வேண்டாமே!

● விடுமுறை நாட்களில், விட்டுப் போன வேலைகளைச் செய்து முடிக்கலாமே!

கடைசியாக, "நேரம் பொன்னானது," "காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்" போன்ற பழமொழிகளை எல்லாம் கூறி உங்கள் நேரத்தை வீணாக்க விரும்பவில்லை. ஆனால், தினந்தோறும் அதிகாலை எழுந்திருக்கப் பழகிக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் அதிக நேரம் நம் கையில் இருக்கும். சுறுசுறுப்பாக வேலைகளைத் தொடங்குங்கள். எந்த நிலையிலும் பதற்றப்படாமல் ஒரே மாதிரி வேகத்துடனும், மகிழ்ச்சியுடனும் செய்து முடியுங்கள். இப்பொழுது பாருங்கள், வெற்றியும் நேரமும் நம் கைகளில்தான்!

# நேருவின் கனவு நிறைவேறுகிறது!



* டாக்டர் இமயவரம்பன்

தமது ரஷிய விஜயத்தின் போது ஜவாஹர்லால் நேரு அங்கு இயங்கும் விவசாயப் பண்ணைகளைப் பார்த்து விட்டு, இம்மாதிரியான அமைப்புக்களை இந்தியாவிலும் தோற்றுவிக்க வேண்டும் என்று விருப்பப்பட்டு வழிமுறைகளை ஆராய்ந்தார். ஆனால் அவரது வாழ்நாளில் நிறைவேறாத இந்த ஆசை 1969-ம் ஆண்டு செயலுருப் பெற்றது.

திருவண்ணாமலையிலிருந்து 45 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள மேல்செங்கம் கிராமத்தில் இயங்கும் மத்திய அரசுப் பண்ணை தான் அது.

இப் பண்ணையின் செயல்திறன் பற்றியும், சமுதாயப் பணி பற்றியும் அறிந்து வரச் சென்றிருந்த போது, ''பண்ணை ஆரம்பித்து 18 ஆண்டுகள் வரை - அதாவது 1989 வரை, கிராம மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதிலும், தரமான விதைகளையும் நாற்றுகளையும் தயாரிப்பதிலும் வெற்றி காண முடிந்ததே தவிர, வியாபார ரீதியாக லாபத்தைப் பெற முடியவில்லை. பண்ணையை மூடிவிடும் நிலை வருமோ என்கிற அச்சம் கூட எங்களிடம் இருந்தது'' என்று குறிப்பிட்டார் பண்ணையின் நிர்வாகப் பொறியாளர் குமாரசெல்வம்.

''அந்த அச்சம் பிறகு எப்படி நீங்கியது?''

''ஏராளமான ஒட்டு நாற்றுகளை உற்பத்தி செய்து, வியாபாரரீதியாக விற்று, பண்ணையை லாபகரமானதாக மாற்ற வேண்டும் என்கிற தீர்மானத்தைச் செயலாக்கி ஒரு திருப்பு முனையைக் கண்ட பெருமை எங்களது இயக்குனர் டாக்டர் இமயவரம்பனைச் சாரும்.''

''வேலை வாய்ப்பு தருகிறீர்கள் சரி, ஆனால் அவர்கள் வாழ்க்கைத் தரம் உயர்கிறதா?''

''நிச்சயமாக'' என்றார் டாக்டர் இமயவரம்பன். ''தினக் கூலிகள் தவிர Employees Provident Fund கீழ்வரும் தாற்காலிக வேலையாட்கள் உண்டு. நிரந்தரமாக்கப்பட்டு மாதம் ரூ 2000/-க்கு மேல் ஊதியம் பெறும் வேலையாட்களும் இருக்கிறார்கள். ஆக மொத்தம் தினமும் இப் பண்ணையில் சுமார் 1000 பேருக்குக் குறைவின்றி வேலை செய்கின்றனர். இங்கு பணியாற்றாத அக்கம்பக்கத்து, கிராம மக்களின் வாழ்க்கை மேம்படவும் உதவுகிறோம்.

''இந்தப் பண்ணையில் ரூ 40/- கட்டி விட்டால் தினத்திற்கு ஒன்றாக மாதம் முழுவதும் புல் கட்டு எடுத்துச் செல்லலாம். இதே புல்கட்டு வெளியில் கட்டு ஒன்று சுமார் 22 ரூபாய். பண்ணையிலுள்ள புல் சத்து வாய்ந்தது. வங்கிகளில் சுலபமாகக் கடன் பெற்று கிராம மக்கள் லாபகரமாகப் பால் வியாபாரம் செய்ய இதன் மூலம் உதவ முடிகிறது.

''இது மட்டுமல்ல; மிகத்தரமான பயிர் விதைகளையும், ஒட்டுநாற்றுகளையும் எங்களிடமிருந்து பெற்றுச் செல்லும் விவசாயி, தன் நிலத்தில் அதிக விளைச்சல் காண்கிறான்.

''எங்கள் பண்ணையில் தயாராகும் பருத்தி விதைகளுக்கு நாடெங்கிலும் ஏகப்பட்ட கிராக்கி. மஹாராஷ்டிரா மாநிலத்திலுள்ள பருத்தி உற்பத்தியாளர்கள் கூட எங்களிடமிருந்து பருத்தி விதைகள் வாங்க முன் பணமே செலுத்தி விடுகிறார்கள்!

''தவிர, மா, சப்போட்டா, கொய்யா, மாதுளை ஒட்டுச் செடிகளை உயர்வான தரத்தில் தருகிறோம்.

''சமுதாய மேம்பாட்டிற்கு இப்படியெல்லாம் எங்களால் உதவ முடிகிறது.''

மொத்த நிலப்பரப்பில் மூன்றில் ஒரு பங்கே பயிர் செய்வதற்காக வழங்கப் பட்டுள்ளது. இதில் சுமார் 500 ஏக்கர் நிலம்



* குட்டைத் தென்னையில் குலுங்கும் காய்கள்



* ஒட்டுப் போடப்படும் மாங்கன்றுகள்



* குட்டைத் தென்னைக்குப் பூச்சி மருந்து அடிக்கிறார்

நீர்ப்பாசன முறையிலும், மீதி மழையை எதிர்பார்த்தும் பயிர் செய்யப்படுகிறது.

மேடு பள்ளமான குறுகிய மண்பாதையில் லாவகமாக ஜீப்பை ஓட்டியவாறே, "எதிர்காலத்தில் மொத்த நிலப்பரப்பையும் உபயோகப்படுத்தி, பயிர்த் தொழிலைப் பெருக்குவதுடன் சமுதாயக் காடுகளையும் அமைக்க முடியுமானால் விவசாயத் துறையில் பெரிய புரட்சியையே இப் பகுதியில் உருவாக்கியதாகும்" என்று குறிப்பிட்டார் குமார செல்வம்.

CLOSE PLANTING எனப்படும் ஒட்டு முறையில், மிக உயர்ந்தரக தாய்ச் செடியுடன், 12 முதல் 15 வரை நாட்டு ரகச் செடிகளை விஞ்ஞான ரீதியாக ஒட்டுப் போட்டு, உயர்ரக ஒட்டுச் செடிகளை உற்பத்தி செய்கிறார்கள். இந்தக் கனி தரும் செடிகள் அரசுக்கு செடி ஒன்று ரூ 12க்கும், வெளியாருக்கு ரூ 15/-க்கும் விற்கப்படுகின்றன.

சொட்டுப் பாசன நீர் முறையில் 11 டேங்குகளில் சேமித்த மழை நீரைக் கொண்டு, ஆயிரக்கணக்கான உயர்ரகத் தென்னை மரங்களை வளர்க்கிறார்கள். உயர்ரகக் குட்டைத் தென்னையுடன் சாதாரண ரக உயரத் தென்னங் கன்றுகளை இணைத்துப் புதுரகக் குட்டைக் கன்றுகளைத் தயார் செய்கிறார்கள்.

சூர்யகாந்தி, சபோலா போன்ற எண்ணெய் வித்துக்களும், பருப்பு வகைகள், தானியங்கள், காய்கறிச் செடிகள் எனப் பல விதத் தாவரங்களின் உயர்ரக விதைகளை உற்பத்தி செய்து விவசாயிகளுக்கு விற்கின்றனர்.

மருத்துவமனைகளில் உள்ளது போன்று இங்கும் ஒட்டுச் செடிகளுக்கும், தாய்ச் செடிகளுக்கும் INTENSIVE CARE UNIT, GENERAL CARE WARD என்றெல்லாம் பிரிவுகள் உள்ளன! அது அதற்கு ஏற்ற கவனிப்பு.

விவசாயக் கல்லூரிகள், பாலிடெக்னிக்குகள் போன்றவற்றிலிருந்து வரும் உயர்ரக நாற்றுகளை போஷித்துப் பாதுகாத்து, அவற்றின் வீரியத்தைக் கணிப்பது இங்கு நடக்கும் ஒரு முக்கிய விஞ்ஞானப் பணி.

பண்ணையில் விளையும் பழங்களை டெண்டர், ஏலம் கலந்த நூதன முறையில் விற்பனை செய்கின்றனர்.

இங்கே ரஷிய டிராக்டரும் உண்டு; மாடு பூட்டி ஏர் உழுவதும் உண்டு. கால்வாய் பாசனம், சொட்டு நீர் பாசனம் ஆகிய இரண்டுக்கும் இடமுண்டு. பருவத்திற்கு ஏற்ற பயிர்; ஆண்டு முழுவதும் பயிர் என்று இப்படியாகப் பழைய, புதிய வழிமுறைகளை ஒருங்கிணைத்துப் பண்ணையை நடத்துகிறார்கள்.

"வறட்சியான இந்தப் பகுதியில் வேறு வேலையே கெடைக்காதுங்க. மைசூருக்கும், கோலாருக்கும் வேலை தேடிப் பெண்கள் சென்ற நாட்கள் போய், பெண்கள் பண்ணையிலும் வேலை செய்து, பால் வியாபாரத்தையும் கவனிக்கிறாங்க..." என்றார் இங்கு தினக் கூலிக்கு வேலை செய்யும் கோபாலகிருஷ்ணன். இன்னும் சில மாதங்களில் நிரந்தரமாகி விடுவாராம்.

சிலர் பண்ணையில் வேலை செய்தவாறே சொந்த நிலத்தையும் பணி நேரம் முடிந்த பிறகு கவனித்துக் கொள்கிறார்கள்!

'நாட்டிலுள்ள மொத்த தரிசு நிலங்களையும் இம்மாதிரி பண்ணைகளாக உருவாக்கி, சிறப்பாக நிர்வகித்தால் வேலையில்லாத் திண்டாட்டமும், உணவு பற்றாக்குறையும் எந்த அளவுக்கு நீங்கக்கூடும்?' என்று நமக்குள் கனவு மிதக்கிறது.

கட்டுரை : நாயகன்

படங்கள் : பாலாஜி

# மாயக் குதிரை

## கிருஷ்ணா டாவின்ஸி

## 1

நகரத்தின் மத்தியில் அழகான காம்பவுண்டினுள் ஒரு கட்டடம். அதன் வாசலில் பெரிய பெயர்ப் பலகையில் ''மாநில நோய்த் தடுப்பு மையம்'' என்கிற எழுத்துக்கள்.

அரசாங்க ஜீப் ஒன்று அங்கு நுழைந்து நின்றது. சிலர் இறங்கினார்கள். அவர்களின் கைகளில் ஃபைல்கள் இருந்தன. அதிகாரிகள் போலிருந்தார்கள். அவர்கள் அந்த அலுவலகத்தின் டைரக்டரைச் சந்தித்தார்கள். துல்லியமான கண்ணாடி அணிந்திருந்த ஒருவர் டைரக்டரைப் பார்த்து, ''ஸார்! நாங்கள் 'ஸ்டாக் வெரிஃபிகேஷன் டிபார்ட்மெண்டின்' விஜிலென்ஸ் பிரிவிலிருந்து வருகிறோம். இந்த ரிஸர்ச் அலுவலகத்தில் ஸ்டாக் கணக்கை எடுக்குமாறு எங்களுக்கு உத்தரவு!''

டைரக்டர் புன்னகை செய்து, ''தாராளமாய்'' என்றார்.

உடனே ஏற்பாடுகள் செய்தார்.

அவர்கள் ஃபெனோலிக் வாசனை வீசிய அறையினுள் நுழைந்தார்கள். பெரிய ஃப்ரீஸர் கதவுக்கு முன்னால் இருந்த யூனிஃபார்ம் அணிந்தவன் கதவைத் திறந்தான். வெள்ளை கோட்டு அணிந்த ஒரு டாக்டர் வழிகாட்டியவாறு முன்னால் நடந்தார். சொன்னார்.

''நாங்கள் பல விதமான ஆராய்ச்சிகளை இங்கே செய்கிறோம். இந்த பரிசோதனைக் கூடத்தில் 'ஒழிக்கப்பட்டு விட்ட' நோய்க் கிருமிகள் கூட இருக்கின்றன. பெரியம்மை மாதிரி...''

''எய்ட்ஸ் வைரஸ் கூடவா?'' என்றார் ஒருவர்.

''ம்! ஹெ.ஐ.வி.'' என்றார் அவர்.

''எப்படி ஸ்டோர் செய்வீர்கள்?''

''பல விதங்களில். பொதுவாக திரவ நிலை நைட்ரஜனில் வைப்போம்.''

இன்னுமொரு கதவைத் திறந்து உள்ளே நுழைந்தார்கள். டாக்டர் திரும்பி, ''இது தான் ஃப்ரோஸன் ஸிரா அறை. இங்கே இருப்பவை எல்லாம் ஆபத்தில்லாத கிருமிகள்'' என்றார்.

ஒருவர் ஃபைலை எடுத்துக் காகிதங்களைத் திருப்பி, ''அ! இதோ இருக்கிறது இண்டக்ஸ்'' என்றார். அவர்கள் 'செக்' செய்ய ஆரம்பித்தார்கள். சின்னச் சின்ன ஷெல்ஃபுகளில் இருந்த கண்ணாடி டியூப்களை, எண்ணிக்கை, பெயர், வருடம் வாரியாகக் கூர்ந்து கணக்கெடுத்தார்கள். டாக்டர் வினோதமாகப் பார்த்தபடி நின்றார். ஒவ்வொரு அறையாகக் கணக்கெடுத்தார்கள்.

பத்தடி உயரம் இருந்த ஸிலிண்டரைத் தாண்டி நீர்மூழ்கிக் கப்பல் மாதிரி தோற்றம் கொண்ட ஓர் அறையில் கொஞ்சம் பயந்து கொண்டே நுழைந்தார்கள். கம்ப்ரஸரின் 'விர்ர்ர்' சப்தம் கேட்டது. டாக்டர் திரும்பி, ''இதுதான் முக்கியமான அறை. இங்கே ஆபத்தான கிருமிகளை வைத்திருக்கிறோம். காமா கதிர் ஜெனரேட்டர் வைத்திருக்கிறோம். பயம் வேண்டாம்.''

ஆனால் அவர்களையுமறியாமல் மனத்தில் க்ளஸ்ட்ரோஃபோபியா தொற்றிக் கொண்டது. டாக்டர் மனத்திற்குள் சிரித்தபடி விளக்குகளைப் பளிச்சென்று போட்டார். அறையில் இருந்தவை தரிசனம் தந்தன. சென்ட்ரிஃப்யூக்ஸ், இன்குபேட்டர்கள், மைக்ரோஸ்கோப்புகள்.

''இதோ, இவைதான்!'' என்றார்.

அலமாரிக் கதவு விலகியதும் இன்ஸுலேட்டட் புறாக்கூண்டுகளில் சுழலும் தட்டுக்களில் குச்சி குச்சியாக டியூப்கள் தெரிந்தன. டியூப் கண்ணாடிகளில் ஏதோ படிந்திருக்க, ''இவையெல்லாம் உயிருள்ள செல்கள். உள்ளே வைரஸ்கள் இருக்கின்றன'' என்றார் டாக்டர்.

அவர்கள் அச்சமாகக் கணக்கெடுத்தார்கள்.

''இவை ஹான்ஸன் பாஸிலஸ். மொத்தம் இரண்டு டியூப்கள்.''

''கரெக்ட்.''

''இது லெப்டோஸ்பிரா. ஒன்றே ஒன்று.''

''ஆமாம்'' கணக்கு சரியாக இருந்தது.

''இது பி.எல்.டி. வைரஸ்.''

''கணக்கு சரி.''

''இது பிளாஸ்மோடியம். மொத்தம் நான்கு.''

''மிகச் சரி.''

''இது பாஸ்ட்ரெல்லா பெஸ்டிஸ். ப்ளேக் வைரஸ்.''

''ம். சரியாகத்தான் இருக்கிறது.''

''இது ஆக்டினோ-பாஸில்லஸ்.''

''வெய்ட். ஒன்று? சரி.''

''இவை நியூரோடிராபிக் வைரஸ்.''

''மொத்தம் எத்தனை டாக்டர்?''

டாக்டர் டிரேயைப் பார்த்து, ''மூன்று'' என்றார்.

''மூன்றா? இண்டெக்ஸில் நான்கு என்றிருக்கிறது...?''

''என்னது!''

''ஆமாம். பாருங்கள். நியூரோடிராபிக் வைரஸ்! அதுதானே?''

''ஆமாம்.''

''நான்கு இருக்க வேண்டும்.''

''மூன்றுதான் இருக்கிறது. எப்படி?''

டாக்டர் நெற்றியைத் தேய்த்தார். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அவர்கள் மறுபடி கணக்கைப் பார்த்து, அவசரமாகத் தேடி, உதட்டைப் பிதுக்கி, ''ம்ஹூம். ஒரு வைரஸ் ட்யூபைக் காணவில்லை'' என்றார்கள்.

சூர்யா உள்ளே நுழைந்ததும் டாக்டர் அமர்நாத் அவசரமாக எழுந்து நின்றார். சூர்யா சிரித்தபடி ''உட்காருங்க டாக்டர்!'' என்றான். சூர்யா! டாக்டருக்கே அவனைப் பார்க்கையில் பிரமிப்பு வந்தது. தமிழ்த் திரையுலகின் சக்கரவர்த்தி! ஒவ்வொரு படமும் ஹிட். போட்ட பணம் முதல் வாரத்திலேயே வந்து விடும் அட்சய மனிதன். ஆயிரத்தில், லட்சத்தில், கோடியில் ஒரு மனிதனுக்கே இத்தகைய வாய்ப்புக் கிடைக்கிறது. அவன் உயர்வதை யாராலும் தடுக்க முடியாது. அவன் புன்னகையின் பின்னால் எத்தனை இளைஞர்கள்! விரல் சொடுக்கிற்காகக் காத்திருக்கும் ரசிகர்கள்! தூண்டில்களுடன் அரசியல்வாதிகள்! உயரத்தில், மிக உயரத்தில் மின்னும் பிரகாசமான செல்வ நட்சத்திரம்.

சூர்யா வெள்ளை பைஜாமா குர்தாவில் இருந்தான். எதிரே அமர்ந்து கொண்டான். அவன் கழுத்தில் சாய்பாபா டாலர் ஜொலித்தது. உதடுகள் நிகோடின் ரிமூவரால் சுத்தம் செய்யப்பட்டு ரோஸடித்தன. கண்களின் கூர்மை வெற்றியின் காரணங்களில் ஒன்று. முழுக்க முழுக்க 'வெற்றி'யின் பரிபூர்ண பிம்பம் அவன்! முப்பத்தி ஐந்து வயது!

''டாக்டர்! சில கன்ஸல்டேஷன்ஸ்'' என்றான்.

''சூர்யாவுக்கு இல்லாமலா!'' என்றார்.

''டாக்டர்! அக்டோபர் மாதம் பத்தாம் தேதியிலிருந்து ஒரு ஹிந்தி படத்திற்குக் கால்ஷீட் கொடுத்திருக்கிறேன். இந்தர்ஜித் பரத்வாஜின் படம். ஐந்து கோடி செலவு. ஆல் யு நோ பாலிவுட் கரம் மசாலா...'' என்றான்.

டாக்டர் சிரித்து, ''ரத்தத்திற்கு ரத்தம்'' என்றார்.

சூர்யா கொஞ்சம் ஸீரியஸாக, ''நேஷனல் அளவில் என் நிலையைத் தீர்மானிக்கப் போகும் படம் அது. ஆக்ஷன் படம். அந்தப் படத்திற்காக என்னை, ஐ மீன், என் உடலைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.''

''யு வில் பி ஆல்ரைட் சூர்யா.''

''அதற்குத்தான் வந்திருக்கிறேன். முழு 'செக்கப்' செய்து விடுங்கள். ஏதாவது தப்பு இருந்தால் சரி செய்து விடுங்கள்.''

''யு ஹாவ் எனி கம்ப்ளெய்ண்ட்ஸ்?''

''சில சமயம் தலைவலி. சோர்வு.''

''பிபி பார்த்து விடலாம். அப்புறம்?''

''சில நேரங்களில் கை நடுங்குகிறது. ஐ மீன், ரொம்ப அபூர்வமாக. அப்புறம் வாழ்க்கையின் மீது திடீர் திடீரென்று சலிப்பு...''

''சூர்யா, குடிப் பழக்கம் இருக்கிறதா?''

''மிகக் கொஞ்சம்.''

''அந்த மிகக் கொஞ்சத்தைத் தவிருங்கள்.''



"அந்தப் போலீஸ்காரர் ரொம்ப நல்லவர்..."

"எப்படிச் சொல்றீங்க...?"

"யாராவது எதையாச்சும் காணோம்னு புகார் கொடுக்கப் போனால், 'திருட்டுப் போன பொருளைவிட மாமூல் செலவு அதிகமாகும்; பரவாயில்லையா...?'ன்னு முதல்லேயே கேட்டுடுவார்!"

- சீர்காழி வி. ரேவதி

''கஷ்டம்'' என்றவன் சிரித்தான்.

டாக்டர் அவனை எழுப்பி, ஒவ்வொரு டெஸ்டாக செய்ய ஆரம்பித்தார். சூர்யாவின் உயரம் 175 செ.மீ. அதற்கு மீடியம் ஃப்ரேம் எடை அறுபத்தி நாலிலிருந்து எழுபது கிலோ வரை இருக்கலாம். சூர்யா எழுபத்தி எட்டு இருந்தான்.

''சூர்யா! எடை அதிகம்'' என்றார்.

''எவ்வளவு அதிகம் டாக்டர்?''

''எட்டு கிலோ.''

''ஓ, நோ!''

சூர்யாவுக்கு பிபி நார்மலிலிருந்து கொஞ்ச அளவே அதிகமாக இருந்தது. (டென்ஷனைக் குறைத்தால் போதுமானது). பசி உணர்வு நார்மல். மனைவியுடன் செக்ஸில் பிரச்னை ஏதும் இல்லை. (அது நிறைய ஸிம்ப்டம்களைக் காண்பித்து விடும்). கார்டியோகிராஃபில் சுகமான இருதயத் துடிப்பு. கண்கள் எந்த நோயின் முன்னுரையையும் காண்பிக்கவில்லை. சிறுநீர், ரத்தம் உடனடி பரிசோதனைக்கு அனுப்பினார். ஹீமோக்ளோபின் அளவு சரியாக இருந்தது. எல்லாம், எல்லாம், ஆல்ரைட்!

''ஒன்றே ஒன்றைத் தவிர. அது உங்கள் எடை!'' என்றார் டாக்டர் அமர்நாத். கைகளைக் கழுவி விட்டு அமர்ந்தார்.

''எனக்கே தெரிகிறது டாக்டர். சண்டைக் காட்சிகளில் மூச்சு வாங்குகிறது.''

''எட்டு கிலோ கலபம் சூர்யா. நிறைய கலோரிகளைச் செலவழிக்க வேண்டும். முப்பத்தைந்து கி.மீ. வேகத்தில் நடந்தால் ஒரு நிமிஷத்திற்கு ஐந்து கலோரி செலவாகும். அதே வேகம் சைக்கிளில் என்றால் எட்டு கலோரி. நீச்சலில் பதினொன்று.''

''எனக்கு நீச்சல் தெரியாது'' என்று சொன்ன சூப்பர் ஸ்டாரை ஆச்சர்யமாகப் பார்த்தார்.

அவன் சிரித்தான். ''டாக்டர்! ஹார்ஸ் ரைடிங் பரவாயில்லையா?''

''ஓயெஸ். அது மிகவும் நல்லது.''

''குதிரை ஒன்று வாங்கி விடுகிறேன். என் பங்களாவின் பின்னால் பெரிய மைதானம் வைத்திருக்கிறேன்.''

''செய்யுங்கள். இடைவிடாமல் செய்ய வேண்டும்.''

''செய்துவிட்டுப் பார்க்கலாம். எட்டு கிலோ யாருக்குக் குறைகிறது, எனக்கா குதிரைக்கா என்று...''

டாக்டர் சிரித்தார்.

''அதிகாலையில் செய்யலாமா டாக்டர்?''

''அதுதான் சரியான சமயம். நம் யாருக்குமே அதிகாலையின் மகத்துவம் தெரிவதில்லை. அந்த நேரத்தில் மூடிய அறைக்குள் போர்த்திக் கொண்டு தூங்கும் முட்டாள்கள் நாம்!''

''வேறு எதுவும் பிரச்னை இல்லையே டாக்டர்?''



''வியாபாரம் எப்படி இருக்கு?''

''ரொம்ப மோசம். ஏகப்பட்ட அயோக்கியர்கள் கடை வைத்து நியாயமான விலைக்கு விற்க ஆரம்பிச்சிட்டாங்க.''

- 'கவலையை மறந்து சிரியுங்கள்' நூலிலிருந்து தொகுப்பு : ஆர். பிரகாசம்

''யு ஆர் அப்ஸொலூட்லி ஆல்ரைட். டயட் மட்டும் கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்கள். தயவு செய்து சிகரெட்டைத் தொடாதீர்கள். ஆல்கஹால் வேண்டவே வேண்டாம். ரொம்ப முடியவில்லை என்றால் ஒயின் மட்டும் ஒரு கிண்ணம் சாப்பிடுங்கள்.''

''ஒரு கிண்ணம்? ஓ, டாக்டர்! ஹேவ் எ ஹார்ட்!''

''சூர்யா! நீங்கள் ஒரு சூப்பர் ஸ்டார்!''

''இல்லை. நான் வெறும் மனிதன்'' என்றான் மாயநாயகன் சூர்யா.

சூர்யாவின் புதிய ஹிந்தி படத்திற்கான விளம்பரம் 'ஸ்கிரீனில்' இரண்டு பக்கத்திற்கு அட்டகாசமாக வெளிவந்தது. அன்று மாலை சூர்யா தன்னுடைய உதவியாளனை அழைத்து 'ஹார்ஸ் ரைடிங்'கிற்கு ஏற்பாடு செய்யச் சொன்னான். சூர்யாவின் பங்களாவுக்கு அந்தக் குதிரை வந்து சேர்ந்தது. வெல்வெட் கறுப்பில் தகதகவென்று மின்னியபடி கம்பீரமாக நின்றது. உடல் தொட்டால் வழுக்கியது. அதைப் பராமரிக்க துரை என்பவன் பவ்யமாக அருகில் நின்றான். சூர்யா குதிரையைத் தட்டிக் கொடுத்தபடி, ''என்னய்யா துரை? நல்ல பேருப்பா! குதிரை! துரை! குதிரை எப்படி? மேலே ஏறினா தள்ளி விட்ருமா?''

துரை பதறி, ''இல்லீங்க. ரொம்ப சாதுங்க. சொல்றபடி கேக்கும். கடிவாளம் புடிக்கிற கணுவைக் கத்துக்கிட்டாப் போதுங்க...'' என்றான்.

''குட். இனிமேல் இது பேரு பிளாக்கி! ஏய், பிளாக்கி! யு நோ மீ? நாந்தான் சூர்யா!''

அது வாயை மென்றபடி சூர்யாவை அலட்சியமாகப் பார்த்தது. அதனைத் தட்டி, ''நீயும் கறுப்பு, நானும் கறுப்பு'' என்றான். அது தலையைச் சிலிர்த்து உதறியது.

சூர்யா சிரித்தபடி வீட்டினுள் நுழைந்தான்.

குதிரை ஒருமுறை கனைத்தது.

யாருக்கும் அந்தக் குதிரையின் கொடூரம் பற்றித் தெரியவில்லை.

(தொடரும்)



* ஹெக்டே

# பிளவுபடும் ஜனதாதளம்!

## பெங்களூர் ரிப்போர்ட் :

கர்நாடக ஜனதா தளம் உடைவதற்குத் தயாராகி விட்டது. ஜனதாதள மேலிடத் தலைவர்களுக்கும் ராமகிருஷ்ண ஹெக்டேக்கும் இடையில் ஏற்பட்ட விரிசல், கட்சியில் பெரிய பிளவாக விழுந்திருக்கிறது. வி.பி.சிங்கின் நடவடிக்கைகளை வெளிப்படையாகக் கண்டிக்கிறார் ஹெக்டே. ''அவரது நடவடிக்கைகள் சர்வாதிகாரம் கொண்டவையாகவும் பிளாக்மெயில் செய்வதாகவும் உள்ளன'' - என்று ஹெக்டே சொல்லப் போக, ''சில தொழிலதிபர்களிடமிருந்து பணப் பெட்டிகளை வாங்கிக் கொண்டு கர்நாடக ஜனதா தளத்தை உடைக்கச் சிலர் தயாராகி விட்டார்கள்'' என்று மாநில ஜனதாதளத் தலைவர் ஜே. எச். பட்டேல் அறிக்கை கொடுக்க, விஷயம் சிக்கலாகி விட்டது. மதுதண்டவதே, ஜார்ஜ் பெர்னாண்டஸ், இரா. செழியன் ஆகியோர் ஹெக்டேயைச் சமாதானப்படுத்த அவசரமாய் பெங்களூர் வந்து முயன்றார்கள். ஒன்றும் பிரயோஜனமில்லை. ஹெக்டேயின் பக்கம் அத்தனை எம்.எல். ஏக்களும் இருக்கிறார்கள். தவிர மக்கள் ஆதரவு பெற்ற தலைவரும் ஹெக்டேதான். இந்த நிலையில் கட்சி உடையுமானால் லாபமடையப் போவது மொய்லிதான்!

வீரப்ப மொய்லியின் மந்திரி சபை விரிவாக்கம் பல பேரை முகம் சுளிக்க வைத்திருக்கிறது. மொத்தம் நாற்பத்திரண்டு மந்திரிகள். இதற்கு முன்னர் தேவராஜ் அர்ஸ் காலத்தில்தான் இதைவிடப் பெரிய மந்திரி சபை இருந்தது. அறுபத்தியொரு மந்திரிகள். இத்தனை மந்திரிகளுக்கு வீடுகள் ஒதுக்குவது மட்டுமல்லாமல், தலைமைச் செயலகத்தில் அலுவலகங்கள் ஒதுக்கித் தருவது கூட அதிகாரிகளுக்குப் பெரிய பிரச்னையாகி விட்டிருக்கிறது.

'இவ்வளவு பெரிய மந்திரிசபை ஏன்?' என்று கேட்டதற்கு முதலமைச்சரின் பதில் : ''அசாதாரணமானதுதான்... ஒப்புக் கொள்கிறேன்... தேர்தல் முடிந்து இரண்டு வருடங்களுக்குள் நான் கர்நாடகத்தின் மூன்றாவது முதலமைச்சராக வந்திருக்கிறேனே... இதுவே அசாதாரணமானதுதானே!''

அரசாங்க சம்பந்தப்பட்ட இடங்களில் புகைபிடிக்கக் கூடாது என்று சட்டம் போட்டிருக்கிறது கர்நாடக அரசாங்கம். கோர்ட் வளாகங்கள், போலீஸ் நிலையங்கள், அரசாங்கத்தின் பொது அலுவலகக் கட்டடங்கள் எங்கேயும் புகைபிடிக்கக் கூடாது. மீறினால் நூறு ரூபாய் அபராதம்... அல்லது எட்டு நாட்களுக்கு சிறைத் தண்டனை என்கிறது சட்டம். சட்டத்தின் செயல்பாடுகளைப் பார்த்துக் கொண்டு மொத்தமாகவே பொது இடங்களில் புகைக்கத் தடை கொண்டு வரவும் திட்டம் இருக்கிறதாம்.

– பெர்னாண்டஸ்

- ○ பெங்குவின் பறவைகள் ஒரே இடத்தில் ஏழு லட்சம் வரை எண்ணிக்கையில் கூடும்.
- ○ இந்தியாவிலுள்ள மிகப்பெரிய மாநிலம் உத்திர பிரதேசம். இம்மாநிலத்தில் உள்ள மாவட்டங்களின் எண்ணிக்கை 56.
- ○ தங்கத்தினால் உருவாக்கப்பட்ட மிகப் பெரிய பொருள் எகிப்திய மன்னர் டூட்டன் ஹாமனுடைய சவப் பெட்டிதான். இதன் எடை 1120 கிலோ!
- ○ ஸ்பெயின் நாட்டில் அம்மா பெயரின் முதல் எழுத்தைத்தான் தங்கள் பெயருக்கு முன்னால் இனிஷியலாகப் கொள்வர்.

- ந.க. பரமசிவம்

உங்கள் சின்னஞ்சிறு செல்விக்கு மற்றும் உங்கள் எதிர்கால மருமகனுக்கு இப்போது ஒரு தனிச்சிறப்பான பாதுகாப்புத் திட்டத்தை எல்ஐசி வழங்குகிறது.



# ஜீவன் சுகன்யா

20 வயது வரை ப்ரீமியம் செலுத்தி
50 வயது வரை இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பைப் பெறுதல்.

ஒரு வயதிலிருந்து 12 வயது வரையுள்ள பெண் குழந்தைகளுக்கென இந்த தனிச்சிறப்பான இன்ஷ்யூரன்ஸ் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. இதன்படி இன்ஷ்யூரன்ஸ் செய்த பெண் தன் 20 வது வயதில் இன்ஷ்யூர் செய்யப்பட்ட முழுத் தொகையைப் பெறுவதோடல்லாமல், தன்னுடைய 50 வது வயது வரை இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பையும் பெறுகிறாள்.

- திருமணம் செய்து கொண்டதும் கூடுதல் கட்டணமின்றி இந்த பாதுகாப்பு கணவருக்கும் நீடிக்கப்படுகிறது.
- 20 வயது வரையே ப்ரீமியம் தொகை செலுத்த வேண்டும்.
- முழுக்காலவரைக்கு உரித்தான போனஸ் தொகையை அவள் 50 வயதை அடைந்ததும் கொடுக்கப்படும்.

***மேற்கொண்டு விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள எல்ஐசி அலுவலகத்தையோ அல்லது எல்ஐசி முகவரையோ அணுகவும்.***



**இன்ஷ்யூர் செய்யுங்கள் பத்திரமாக இருங்கள்.**

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

Rediffusion/LIC/639/7-92-TAM



# அம்மாவுக்கு

பட்டாணி கை இடுக்கில் மஞ்சள் நிற துணிப் பையை அழுத்திக் கொண்டு ரயிலிலிருந்து இறங்கினான். ஸ்டேஷன் முழுதும் இறைந்திருந்த கூட்டத்தை ஆச்சரியமாய்ப் பார்த்து, ''ஏங்க... இது பட்டணம்தானே...?'' என்றான் கடந்து சென்ற ஒருவரிடம். இவனை ஓர் அலட்சியப் பார்வை பார்த்து விட்டு, ''ஆமாம்யா'' என்று சொல்லி விட்டு நகர்ந்தார் அவர்.

ரயிலை ஒட்டி கார்கள் நிற்பதை ஆச்சரியமாகப் பார்த்த பட்டாணிக்கு, எப்படி ஸ்டேஷனை விட்டு வெளியே போவது என்று குழப்பமாக இருந்தது.

பக்கத்தில் நின்றவரை மெல்ல அழைத்தான். ''ஐயா...''

அவர் என்ன என்பது போலப் பார்த்தார்.

''அம்மாகிட்டே மனு கொடுக்கணுங்க. எனக்கு நாகப்பட்டினம் ஜில்லாங்க. ரோட்டுக்கு போகணும். எப்படிங்க போறது...?'' தயக்கமாகக் கேட்டான்.

''இந்த படி வழியா ஏறிப் போ.''

''சரிங்க... ரொம்ப நன்றிங்க...''

பட்டாணி கூட்டமாக எல்லோரும் ஏறிய படியில் ஏறினான். ஸ்டேஷன் கூரையை பிரமிப்பாகப் பார்த்துக் கொண்டே படி இறங்கி வெளியே வந்தான்.

இரண்டு பக்கமும் வேகவேகமாகச் சென்ற வாகனங்களை வியப்பாகப் பார்த்தான். கோட்டைக்குச் செல்ல எந்த பஸ்ஸில் ஏற வேண்டும் என்று அவனுக்குத் தெரியவில்லை. என்றாலும், மணியக்காரர் சொன்னது நினைவில் இருந்தது. ''அம்மாகிட்டே மனு கொடுக்கணும்னு சொல்லு. கொண்டு போய் எறக்கி விட்டுடுவாங்க.''

வந்து நின்ற பஸ்ஸில் ஓடிச் சென்று ஏறினான். அவன் அப்பாவித் தோற்றத்தைப் பார்த்த கண்டக்டர், ''எங்கய்யா போகணும்?'' என்றார் அதட்டலாய். பட்டாணி அரண்டு போய், ''எனக்கு நாகப்பட்டினம் ஜில்லாங்க... எங்க ஜில்லாக்காரங்ககிட்ட அம்மா இன்னிக்கு மனு வாங்கறாங்க. மனு கொடுக்க கோட்டைக்குப் போகணும்.'' பட்டாணி சப்தமாகச் சொல்ல, பஸ்ஸில் இருந்த அனைவரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள். சிலர் ரகசியமாகக் கிசுகிசுத்து, தங்களுக்குள் சிரித்துக் கொண்டார்கள்.

''இந்த பஸ் போவாது. அந்தப் பக்கம் போய் நில்லு. பஸ் வரும்.. அதுல ஏறிப் போ.''

''நன்றிங்க...'' என்ற பட்டாணி அவசரமாக இறங்கிக் கொண்டான்.

இத்தனை வாகனங்களுக்கு நடுவில் எப்படி அந்தப் பக்கம் போவது என்று பட்டாணிக்குத் தெரியவில்லை. விரையும் வாகனங்களைப் பார்க்கப் பயமாக இருந்தது. தயங்கியபடியே நின்றான். ஒரு டிராஃபிக் கான்ஸ்டபிள் சாலையைக் கடக்க.. அவர் பின்னாடியே சென்றான்.

கான்ஸ்டபிள் பின்னால் அவனை உணர்ந்து, ''யோவ்... எங்கய்யா போற..?''

''அந்தப் பக்கம் போகணுங்க... அம்மா



வுக்கு மனு கொடுக்கணும்.''

''இப்படித்தான் எம் பின்னாடியே வர்றதா.. ஏன்யா.. இங்கேயே நில்லு... நான் சொல்றப்ப ரோட்டை கிராஸ் பண்ணு.. எந்த ஊரு ஒனக்கு...?''

# ஒரு மனு

திருவாரூர் பாபு

''ஆந்தகுடிங்க... நாகப்பட்டினம் ஜில்லா.''

''அங்கேயிருந்தா வர்ற...?''

''ஆமாங்க சாமி... எல்லாம் எம் பேத்திக்காக சாமி... என் உயிரைக் கூட கொடுப்பேங்க...''

''என்ன ஒன் பேத்திக்கு?'' சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு அவன் வாயைக் கிளறினார் அவர்.

''என்னத்தங்க சொல்றது... பெரிய சோகமுங்க அது. இவளைப் பெத்துப் போட்டுட்டு என் பொண்ணு கண்ணை மூடிட்டாங்க. பதினெட்டு வருஷம் கண் கலங்காம வளர்த்து, உள்ளூர்லேயே ஒரு பாவிப்பய கையில கொடுத்துட்டேன் சாமி. கல்யாணத்துக்கு முந்தி நல்லாத்தான் இருந்தான். இப்ப கேட்பார் இல்லாம ரௌடியாத் திரியறான். உங்ககிட்ட சொல்ல வாய் கூசுதுங்க. சாராயம் காய்ச்சறான். உங்க ஆளுங்களும் அதுக்கு உடந்தைங்க. எப்படியோ போறான். என் பேத்தியக் கண்கலங்காம வச்சிருந்தாச் சரி.. அதுவும் இல்லைங்க. தினமும் குடிச்சிப்புட்டு வந்து அடி, உதை... எங்கிட்ட வந்து அந்த புள்ள அழுவுதுங்க. என் மனசு தாங்கலைங்க. என் உயிருங்க அது. பத்து வருஷம் எனக்கு ஆக்கி போட்ட புள்ளைங்க அது. ஊர்ப் பெரியவங்க அந்த களவாணி பயலுக்குப் பயப் படறாங்க. போலீஸ்ல பிராது கொடுத்தா என்னையே மிரட்டுறாங்க. அதான் ஊர் மணியக்காரர் அம்மாவப் பார்க்கச் சொன்னாருங்க. மாட்டை வித்து பணம் சேத்துக் கிட்டு உடனே கிளம்பிட்டேங்க. எனக்குக் காசு பணம் பெரிசில்லைங்க. எம் பேத்தி நிம்மதியா இருக்கணுங்க. அதான் வேணும் சாமி...''

''பணம் நிறைய வச்சிருக்கியா...?''

''இருக்குங்க...'' என்றவன் கெக்கெக் பாக, ''மடியில முடிஞ்சு நானூறு ரூவா வச்சிருக்கேங்க...''

''இவ்வளவு பணம் வச்சுக்கிட்டு பஸ்ஸுக்கு நிக்கறியே... பஸ் வர லேட்டா கும்யா... பேசாம ராஜா மாதிரி ஆட்டோவுல போறியா... கசங்காம கோட்டை வாசல்ல போயி இறங்கலாம்.''

''சரிங்க சாமி... நீங்க கெடுதலா சொல்லப் போறீங்க... உங்களுக்குத் தெரி





"டைரக்டருக்கு பழைய தொழில் ஞாபகம் போகலை போலிருக்கு!"
"ஏன்?"
"ஹீரோயின் கழுத்திலிருக்கிற இரட்டைவடம் சங்கிலியைப் பார்த்துட்டு 'கட்..கட்'டுங்கறாரே!"

- எஸ். ரமேஷ்

யாதா... ஆட்டோ எங்க நிக்கும்...?''

''சித்த இரு.. இங்கேயே வரும்'' என்றவர் சிறிது நேரம் கழித்து, கடந்து சென்ற ஓர் ஆட்டோவை விசில் ஊதி அழைத்தார்.

ஆட்டோ அவர் அருகில் வந்து நின்றது. ''ஏறுய்யா...'' என்றவுடன் பட்டாணி ஏறிக் கொண்டான். ''ஐயாவைக் கொண்டு போய் கோட்டையில வுடு'' என்றார்.

டிரைவர் தலையை ஆட்டி விட்டு ஆட்டோவை நகர்த்த, பட்டாணி பெரிதாக போலீஸ்காரரைப் பார்த்துக் கும்பிடு போட்டான்.

ஆட்டோ சென்னை மாநகரை ஒரு ரவுண்ட் அடித்த பிறகு, கோட்டை வாசலில் நின்றது.

கட்டைத் தடுப்புக்குப் பின்னே நின்ற கூட்டத்தைப் பார்த்து வியந்து கொண்டே பட்டாணி ஆட்டோவிலிருந்து இறங்கினான்.

''அம்பத்தஞ்சி ரூவா.''

டிரைவர் சப்தமாகச் சொல்ல, பட்டாணி பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

வரிசையில் எங்கு நிற்பது என்று யோசித்துக் கொண்டிருந்த போது, ''ஐயா மனு எழுதிட்டீங்களா...?'' கீழே அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தவர் பட்டாணியைப் பார்த்துக் கேட்க, பட்டாணி கீழே அமர்ந்தான்.

ஃபாரம் தயாராக இருந்தது. ''பேரு என்ன... ஊரு என்ன... சொல்லு.''

பட்டாணி சொன்னான்.

''என்ன சமாசாரம்... மெதுவாச் சொல்லு...''

பட்டாணி கண்ணீருடன் சொன்னதை அவன் கடமையாக எழுதிக் கொடுத்து, ''பத்து ரூவா கொடு'' என்றான். பட்டாணி கொடுத்தான்.

மனுவை வாங்கிக் கொண்டு பட்டாணி எங்கு நிற்பது என்று தவிக்க, ஒரு போலீஸ்காரர் பட்டாணியை இழுத்துச் சென்று ஓரிடத்தில் நிற்க வைத்தார்.

தனக்கு முன்னால் நின்றவர்களைப் பட்டாணி ஏக்கமாகப் பார்த்தான். எல்லோரும் நம் ஜில்லாக்காரர்கள் என்ற நினைவு அவனுள் எழுந்த போது, ஏதோ ஒருவகையில் அனைவரோடும் நெருங்கி விட்ட மாதிரி உணர்ந்தான்.

''நீ ஆத்தருடி பட்டாணிதானே...?''

குரல் கேட்டுப் பட்டாணி நிமிர்ந்தான். பெரிய மீசையுடன் தலை கொள்ளாத முடியுடன் கரை வேட்டி அணிந்த ஒருவர் நின்று கொண்டிருந்தார். யாரென்று தெரியவில்லை. சட்டை பட்டன்களைப் போடாமல் மார்பு ரோமம் தெரிந்தது. தன் பெயர் சொல்லிக் கூப்பிடும் இவன் யார் என்று பட்டாணி தனது மனத்தின் நினைவு அடுக்குகளை அவசரமாகப் புரட்டிப் பார்த்தான். ம்ஹூம். தெரியவில்லை.

அவன் வரிசையிலிருந்து பட்டாணியின் கையைப் பிடித்து இழுத்து வந்தான்.

''வரிசையில நின்னா எப்ப போறது.. எப்ப நீ மனு கொடுக்கறது... அம்மா வர்றதுக்கு மணி ரெண்டாவும்... என்னைத் தெரியல...?''

''தெரியலைங்க...'' பட்டாணி தயக்கமாகச் சொன்னான்.

''சரியாப் போச்சு போ.. நான் வலிவலம் வட்டத் தலைவர்யா.. மணி கேள்விப்பட்டதுல்ல.. அது கிடக்கட்டும்... என்ன சமாசாரமா அம்மாவுக்கு மனு கொடுக்க வந்த? புள்ளைக்கு வேலை கேட்டு வந்தியா... வாங்கிடலாம் வா.''

''அதில்லைங்க. எம் பேத்தி விவகாரம்... அம்மாதான் என் பேத்திக்கு வாழ்க்கையை நல்லபடியா ஆக்கித் தரணும்.''

''எல்லாம் சரி பண்ணிடலாம். இவ்வளவு கூட்டத்துல மனு கொடுத்தின்னா நல்லா இருக்காதுய்யா... பணம் வச்சிருக்கியா...?''

''வச்சிருக்கேன் தம்பி... மாடு வித்த பணம்.''

''ஒரு நூறு ரூபா கொடு.. நான் தனியா அம்மாவைப் பார்க்கிறப்ப உன் விஷயமாப் பேசறேன்... நீ மனு கொடுக்கிறபடி கொடு.''

பட்டாணி விரிந்த விழிகளோடு அவனை ஏறிட்டான். கேட்டான். ''தம்பி நீங்க தனியா அம்மாவைப் பார்ப்பீங்களா..?''

''அப்புறம்...? எதுக்கு மெனக்கெட்டு வலிவலத்துலேந்து இங்க வந்திருக்கேன்...?''

''ரொம்ப சந்தோஷம் தம்பி.. நீங்களா வந்து உதவுறீங்க பாருங்க.. அதான் தம்பி நம்ம ஜில்லாக்காரங்க. யாருக்கு இந்த மனசு வரும்.. எம் பேத்திக்கு ஒரு முடிவு பொறக் கணுங்க. அந்த பயல ஒழுங்காக் குடித்தனம் நடத்தச் சொல்லுங்க'' என்றவன் நூறு ரூபாய் பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

''நீ போயி வரிசையில நில்லு. அப்புறம் ஒன்னைப் பார்க்கிறேன்'' என்று அவன் நகர, பட்டாணி இன்னும் பெரிதாகியிருந்த வரிசையில் வந்து நின்று கொண்டான்.

**ப**ன்னிரெண்டு மணிக்கு ஒரு பொட்டலம் தயிர் சாதம் கொடுத்தார்கள். நின்று கொண்டே பட்டாணி சாப்பிட்டான். அனைவரும் சென்று தண்ணீர் குடித்து விட்டு வர, நகர்ந்தால் தன் இடத்தில் யாராவது வந்து நின்று கொள்வார்களோ என்ற அச்சத்தின் காரணமாகப் பட்டாணி வேட்டியிலேயே கையைத் துடைத்துக் கொண்டு அப்படியே நின்று கொண்டான்.

இரண்டு மணிக்கு ''அம்மா வந்தாச்சு'' என்ற பரபரப்புக்குப் பிறகு வரிசை மெல்ல நகரத் தொடங்கியது.

பட்டாணி படபடப்பாகக் காத்திருந்தான்.

மனசுக்குள் ஏதேதோ நினைவுகள் ஓடின. பேத்திக்கு நல்ல வாழ்க்கை கிடைக்கப் போகிற நினைப்பில் மனசு சந்தோஷமாக இருந்தது. ஆறு மணிக்கு அவன் முறை வந்த போது அம்மாவை அத்தனை கூட்டத்தில் பார்த்த சந்தோஷத்தில் ஒரிரு விநாடிகள் திகைத்து, மனுவைக் கொடுத்து விட்டு, சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து வணங்கினான். ''தலைவர் போனதுக்கப்புறம் நீங்கதாங்க... என் பேத்தி..'' என்று அவன் ஆரம்பித்த போது பக்கத்தில் நின்ற ஒரு போலீஸ்காரர் அவனை நாசூக்காகத் தள்ளி விட, பட் பட் என்று வரிசையாய் நின்ற போலீஸ்காரர்கள் அவனைத் தூரமாய் நகர்த்தினர்.

எல்லாமே கனவு போல இருந்தது அவனுக்கு. சில நிமிடங்கள் கோட்டை வாசலில் நின்று கொண்டிருந்தான். அம்மாவைப் பார்த்த அந்த விநாடி நேர தரிசனத்தில், அவன் பேத்திக்கு ஒரு நல்ல வழி ஏற்பட்டது போல உணர்ந்தான்.

**ப**க்கத்தில் நின்றவர்களைப் பழக்கப் படுத்திக் கொண்டதால் பட்டாணி கஷ்டமில்லாமல் அவர்களோடு ரயில்வே ஸ்டேஷன் வந்து விட்டான்.

டிக்கெட் எடுத்துக் கொண்டு ரயிலில் ஏற முற்பட்ட போது, காலையில் பணம் வாங்கிக் கொண்டு சென்ற வட்டத் தலைவரைப் பார்த்தான். அவன் கண்டுகொள்ளாதது மாதிரி முகத்தைத் திருப்பிக் கொண்டு செல்ல, பட்டாணி நகர்ந்து அவன் முதுகைத் தொட்டான்.

அவன் அப்போதுதான் பட்டாணியைப் பார்ப்பது போல, ''அட! பட்டாணி.. அம்மாவைப் பார்த்தியா...?''

பட்டாணி உற்சாகமாகப் பதில் சொன்னான் :

''பார்த்தேங்க.. எம் பேத்திக்கு நல்ல காலம் பொறக்குமா தம்பி..?''

''பின்னே? ராத்திரியோட ராத்திரியா போலீஸ்காரங்க உம் பேத்தி புருஷனை உதைச்சி, ரெண்டு பேரையும் சேர்த்து வச்சிட மாட்டாங்க...''

''ஏங்க அம்மாகிட்ட இந்த விஷயமாப் பேசினீங்களா..'' பட்டாணி அப்பாவியாய்க் கேட்டான்.



''எல்லா எழுத்தாளர்களும் பெண்களின் கூந்தலைக் கார் குழல்னுதானே எழுதுவாங்க. நீங்க ஏன் ரயில் குழல்னு எழுதியிருக்கீங்க?''

''என்னோட கதாநாயகியோட கூந்தல் கொஞ்சம் நீளமானதுங்க!''

- ஞா. ஞானமுத்து

''பேசிட்டுத்தான் வர்றேன். அதான் இவ்வளவு லேட்டு.. சரி, ரயிலை எடுக்கப் போறான்... நான் வர்றேன். காலையிலேயே டிக்கெட் ரிசர்வ் பண்ணிட்டேன். ஊர் வரைக்கும் படுத்துக்கிட்டே போகலாம். நீ டிக்கெட் எடுத்திட்டியா... இந்தக் கூட்டத்துல உட்கார முடியாதய்யா...''

''அதெல்லாம் வேணாம் தம்பி.. வர்றப்ப கக்கூஸ் பக்கத்துல உட்கார்ந்துகிட்டு வந்தேன்... போறப்பவும் அப்படியே போயிடுவேன்.. நீங்க வாங்க தம்பி.''

''சரி வரட்டா...'' என்று அவன் நகர, பட்டாணி கூட்டம் பிதுங்கிக் கொண்டிருந்த அன்ரிசர்வ்டு கம்பார்ட்மெண்டில் கஷ்டப்பட்டு நுழைந்தான். அவன் சொன்ன மாதிரியே கக்கூஸ் பக்கத்தில் கொஞ்சம் இடமிருந்தது. அவசரமாக உட்கார்ந்து கொண்டான்.

மனத்தில் நிம்மதியை உணர்ந்தான். ஊர் செல்லும் வரை அந்த நிம்மதி நீடிக்கும்.

## 18

**து**றைமுகத்தில் கப்பல்கள் நிற்கின்றன. சிமெண்ட் சுவரில் கடலலை மோதுகிறது. நிலக்கரியும், கந்தகமும் ஏற்றி இறக்கியதில் தரையில் கறுப்பும் மஞ்சளும் ஒரு படலமாய்ப் படர்ந்திருக்க, விசித்திரமான வாகனங்கள் நடித்த தடம் பதித்துப் போகின்றன. தொலைவில் கப்பல் வருகிறது. மேலே மணியடித்துப் பாலம் பிரிந்து வழி விடுகிறது. அலைச்சலின் தொடர்ச்சியாய் வேறு கம்பெனி, வேறு படம், வேறு டைரக்டர். பிரும்மாண்டமான நகர ஷெட் ஒன்றில் யூனிட் இறங்கியிருக்கிறது. மாலை ஆறு மணியிலிருந்து இரவு இரண்டு மணி வரை ஷூட்டிங். முன்னதாகச் சிற்றுண்டி வழங்கப்படுகிறது. படப்பிடிப்பு சிப்பந்திகளும், துணை நடிகர்களும் முண்டியடிக்கிறார்கள். கும்பல் நடுவே லக்ஷ்மிநாராயணன் கையில் தட்டுடன் ''சாம்பார், சாம்பார்'' என்று கெஞ்சிக் கொண்டிருக்கிறான். ''வாங்கண்ணே, எப்படி இருக்கீங்க?'' தெரிந்த முகங்கள் கவனிப்பில் முதலிடம் பெறுகின்றன.

''அண்ணே, கொஞ்சம் சாம்பாரேண்ணே...''

லக்ஷ்மிநாராயணன் குரலில் குழைத்துக் கூட்டுகிறான். தெரிகிற நண்பர்கள் கும்பலில் ஒருவனாகவே வேடம் கிடைக்கிறது. ஆயின் பரவாயில்லை. பெரிய மரங்கள் சிறிய விதைகளிலிருந்தே முளைக்கின்றன. நம்பிக்கையுடன் லக்ஷ்மிநாராயணன் ஒப்பனைக்காரரைத் தேடிப் போகிறான். அவனுக்கு அவ்வளவு அவசரமில்லையென்று அவர் சொல்லி விடுகிறார்.

இரவு மெல்லக் கவிழ்கிறது. கருங்கடலில் கப்பல் விளக்குகள் மின்னிப் பிரதிபலிக்கின்றன. கலங்கரை விளக்கு சுழல்கிறது. சில்லிட்ட காற்று ஊடுருவுகிறது. தேவி உடையில் மேக்கப் முடிந்து தன் முகத்தைப் பார்த்த போது லக்ஷ்மிநாராயணனுக்கே நம்ப முடிகிறதில்லை. திறமையை நம்பினாலேயொழிய அழகு என்றெல்லாம் அவன் தன்னை நினைத்ததேயில்லை. ஆயின் ஒப்பனை வலிமை மிக்கது. மேல் பேசிக் கொண்டே வேண்டா வெறுப்பாய், கரண்டி கடைசியாய்க் கவிழ்கிறது. உட்காருவதற்கு இடம் இல்லை. சூழ்நிலை பூராவுமே தூசிப்படலம். முக்கியஸ்தர்களுக்கு மட்டுமே நாற்காலி போடப்பட்டிருக்கிறது. லக்ஷ்மிநாராயணன் அனைவரையும் பார்த்து நட்புடன் சிரிக்கிறான். அவரவர் யோசனைகளில் யாரும் பதிலுக்குச் சிரிக்கிறதில்லை. வெவ்வேறு நீலங்களில் கடலும், வானமும் தொலைவில் இணைகின்றன. சிறிய படகு ஒன்று உற்சாகமாய் நீர் கிழித்து விரைகிறது. பாறை மேல் வந்தமரும் கடல் பறவை.



''என்னங்க? எவ்வளவு நேரம் பராக்குப் பார்த்து நின்னுக்கிட்டு இருப்பீங்க? போய் சீக்கிரம் மேக்கப் போடுங்க.''

கழுத்தில் விசிலுடன் கான்வாஸ் ஷூவில் போகிற போக்கில் அசோசியேட் டைரக்டர் விரட்டுகிறான்.

லக்ஷ்மிநாராயணன் நடை ஓட்டமாகிறது. இன்னமும் பெயரிடப்படாத புரொடக்ஷன் எண் இரண்டு. வெவ்வேறு இடங்களில் பல்வேறு உடைகளில் கதாநாயகனும், நாயகியும் பாடுகிற பாடல் காட்சியுடன் படப்பிடிப்பு துவங்கியிருக்கிறது. திரும்பவும், திரும்பவும் பின்னணியில் மங்கலாய்த்

பூர்கம், உதட்டுச் சாயமும் ஆளைக் கிறங்க அடிக்கிறது. திருப்தியுடன் லக்ஷ்மிநாராயணன் கண்ணாடியிலிருந்து நகர்கிறான். அவன் கம்பீரத்தில் அசந்து, முதல் முறையாய் காப்பிப் பையன் சிரிக்கிறான்.

தொலைவிலேயே கதாநாயகன் கவனித்து விடுகிறான். பக்கத்தில் டச்சப் பையனைப் பார்வையில் அழைத்து, காதருகில் விஷயத்தைச் சொல்லுகிறான். அசோசியேட்டும், டச்சப்பும் பேசுகிறார்கள். விஷயம் அறிந்து ஒப்பனைக்காரர் லக்ஷ்மிநாராயணனை அழைக்கிறார். வேறு துணியில் அவன் ஒப்பனை வழித்து எடுக்கப்

ம.வே.சிவகுமார்

படுகிறது. இருளில் ஆக்ரோஷமாய்க் கடலலை ஒன்று சிமெண்ட் சுவரில் மோதி உடைகிறது. முதல் ஷாட்டுக்கு அனைவரும் கூடுகிற போது கதாநாயகன், லக்ஷ்மிநாராயணனைப் பார்த்துக் கனிவாகச் சிரிக்கிறான்.

உடலில் இயற்கையாய்த் துள்ளல் வைத்து நடன இயக்குனர் வருகிறார். கண்களை மூடி உடலசைத்துப் பாடலை ஒரு முறை கேட்கிறார். தனியே கதாநாயகன் தனக்கு வரக்கூடிய அசைவுகளை அவரிடம் சொல்லி விடுகிறான். அபாய எல்லையில் உடையணிந்து நடனப் பெண்மணிகள் வருகிறார்கள்.

கப்பலில் லைட்டிங் முடிந்து, மரப் பாலத்தில் பல்ப் எரிகிறது. பின்பக்கம்



புகைக்குச் சாம்பிராணி போடுகிறார்கள். மாபெரும் விஞ்ஞான விந்தையான அந்த இறக்குமதி காமிராவுக்கு இன்னமும் தேங்காயில் கற்பூரம் கொளுத்திச் சுற்றுகிறார்கள். ஸ்பீக்கரில் பாடல் வரி ஒலிக்கிறது. அசோசியேட் டைரக்டர் உடனேயே விசில் ஊதிப் பாடலை நிறுத்துகிறான்.

''என்னப்பா?''

டைரக்டர் நாற்காலியில் புரியாமல் திரும்புகிறார்.

''சார், அந்தக் கண்ணாடி போட்ட ஆளு காமிராவையே பார்க்கறார் சார்.''

''யாருப்பா அது?''

லக்ஷ்மிநாராயணனை ஒரே நேரத்தில் பலரும் திட்டுகிறார்கள். ஷூட்டிங் தொடர்கிறது. அசோசியேட் டைரக்டர் விசில் அடிக்கிறான். அந்தக் கண்ணாடி போட்ட பையன் இந்த முறை நடனத்தில் தவறு செய்து விட்டான்.

கண்ணாடி போட்ட பையனை விலகி ஓர் ஓரமாய் நிற்கச் சொல்லுகிறார்கள். பாடல் வரி தொடர்கிறது.

''லலா, லலா, லலா...''

பின்னணியில் நண்பர்கள் ஆடுகிறார்கள். கப்பலின் மேல் தளத்தில் கதாநாயகன், நாயகி மேல் சாய்கிறான். பாடலின் அடுத்த வரியில் பதிலுக்குக் கதாநாயகி வஞ்சம் தீர்க்கிறாள். குட்டைப் பாவாடையில் நடனப் பெண்மணிகள் வரிசையாய்த் தொடை காட்டுகிறார்கள். பெரும் விளைவை எதிர்பார்த்து ஒளியமைப்பு செய்யப்பட்டிருக்கிறது. இரவு உணவுக்கான பிரேக் விடப்படுகிறது. டைரக்டரிடம் லக்ஷ்மிநாராயணன் அழுது விடுகிறான். இனி எதுவும் செய்வதற்கில்லையென்று டைரக்டர் சொல்லி விடுகிறார். கடல் பரப்பு நிலா வெளிச்சத்தில் மின்னுகிறது. உயரத்திலிருந்து குதித்து விடலாம் போல் ஒருகணம் தோன்றுகிறது. கையில் குழந்தையுடன் விஜயலக்ஷ்மி மனதில் சிரிக்கிறாள். லக்ஷ்மி நாராயணன் மெல்ல நடந்து, பசியில் வெட்கம் மறந்து, தட்டை வாங்கிக் கொள்கிறான்.

**கா**ஸ்ட்யூமர் தேவி உடையைக் கழற்றிக் கொள்கிறார். இனி மேலும் லக்ஷ்மி நாராயணன் அங்கே நிற்க வேண்டிய அவசியமில்லை. இரவு இந்த நேரத்துக்குப் பிறகு வில்லிவாக்கம் போக வேறு வழியும் தெரியவில்லை. சூன்யத்தில் பாடல் வரிகள் ஒலிக்கின்றன. விளக்குகளின் குறுக்கே தொலைவில் மனிதர்கள் நடக்கிறார்கள். இரவு மணி இரண்டு. கம்பெனி வண்டிக்குள் நல்லவேளையாய் விளக்கு எரியவில்லை. இருட்டில் இருண்ட முகத்தில் சென்ட்ரல் ஸ்டேஷன் அருகில் லக்ஷ்மிநாராயணன் இறங்கிக் கொள்கிறான். அங்கிருந்து வில்லிவாக்கம் வழியாக அம்பத்தூர் போகிற ஒரு லாரி பிடித்தாக வேண்டும். தவறு செய்த தாய்ச் சொல்லப்பட்ட அந்த நடன அசைவைத் தார் ரோட்டில், சோடியம் விளக்கில் லக்ஷ்மிநாராயணன் ஆடிப் பார்க்கிறான். சவாரி தேடி ஆட்டோக்காரர் மெல்லப் பார்த்துக் கொண்டே போகிறார்.

அயனாவரம் ரோட்டில் பின்பக்கம் காலியாய் லாரி குலுங்கிப் போகிறது. ஜெனவரியில் அறைந்த ஏக போல் இரண்டு பக்கமும் கம்பி வளையம் பிடித்துக் கொண்டு காற்றில் முடி பறக்க லக்ஷ்மிநாராயணன் தனியே நிற்கிறான். என்றாவது அவன் திறமைகள் உலகத்திற்குத் தெரியத்தான் போகிறது. மவுண்ட் ரோடு முனையில் அவன் கட்-அவுட்டில் நிற்கத்தான் போகிறான். அவனுடைய முயற்சிகளினால் கூட இல்லை. நிச்சயம் அவன் வெற்றி பெறுவான் என்று விஜயலக்ஷ்மி வைத்திருக்கிற நம்பிக்கையின் தீவிரத்தில், நன்மைகள் விளையாமல் போய் விடாது. மெயின் ரோட்டில் வில்லிவாக்கம் அருகே லாரி நிற்கிறது. சிறிய கதவில் கிளீனர் முளைத்து, இரண்டு ரூபாய் வாங்கிக் கொள்கிறான். தொலைவில் டயர் தேய்ந்து லாரி போகிறது.

---



## கஷ்டம் யாருக்கு?

*'நீங்கள் சிறுதொகை கடனாகப் பெற்று அதைத் திரும்பக் கொடுக்க முடியாத நிலை ஏற்பட்டால் நீங்கள் கஷ்டத்தில் மாட்டிக் கொள்வீர்கள்! ஆனால் நீங்கள் ஒரு பெரும் தொகையை வங்கிகளிலிருந்து கடனாகப் பெற்றிருந்து அதைத் திரும்பச் செலுத்த முடியாத நிலை உருவானால், வங்கி கஷ்டத்தில் மாட்டிக் கொள்ளும்!'*

*(வங்கிகளில் நடக்கும் மோசடி குறித்த கட்டுரையில்) - பிசினஸ் இண்டியா*

தகவல் : கிருஷ்ண ராஜ்கோபால்

தெரு நாய்கள் உற்சாகமாய் வரவேற்கின்றன. டீக்கடையில் சைக்கிள் இருக்கிறது. இருட்டில் பிணைந்து மின்னுகிற தண்டவாளம் தாண்டி ஒற்றையடிப் பாதையில் சைக்கிள் இறங்குகிறது. செம்மண் மேடு ஏறி வீடு வருகிறது. இரவு முழுவதற்குமாக வெளியே வாசல் விளக்கு போடப்பட்டிருக்கிறது.

''விஜயலக்ஷ்மி''

முதல் அழைப்பில் சிரித்துக் கொண்டே வாசல் கதவு திறக்கிறது. காலை மணி நான்கு அடிக்கிறது. இரவு விளக்கில் கரகரத்த குரலில் மனைவியிடம் லக்ஷ்மிநாராயணன் நடந்ததைச் சொல்லுகிறான். அவன் மனதை மாற்ற வேண்டி, ஆறுதல் வார்த்தை சொல்லி விஜயலக்ஷ்மி தானாகவே செவ்வாய்க் கிழமை விரதம் மறக்கிறாள். விடுமுறை இல்லாத காரணத்தால் சீக்கிரமே தூக்கம் கலைந்து ஃபார்மஸியில் டெலிபோன் செய்து ஒரு மணி நேரம் தாமதமாய் லக்ஷ்மிநாராயணன் அலுவலகம் புறப்படுகிறான்.

எதிர் வீட்டில் விவரம் விசாரித்து மாமனார் சூள் கொட்டுகிறார். தன் காலம் முடிவதற்குள் லக்ஷ்மிநாராயணன் நடித்து ஒரு படமாவது பார்க்க வேண்டும் என்று அவன் திறமைகளை நேரில் கண்ட ஆசையிலும், விஜயலக்ஷ்மியின் மேல் அவள் வைத்திருக்கிற பிரியத்திலுமாக நவகோடி அம்மாள் சொல்லுகிறாள்.

பீச் ஸ்டேஷன் அலுவலகம். தற்சமயம் கரண்ட் அக்கவுண்ட் வனஜா கிடையாது. மத்தியில் வந்த பரீட்சைகளில் நண்பர்களில் பெரும்பாலோர் உயர்வு பெற்று விட்டார்கள். புதியதாய் வேறு அக்கவுண்டண்ட் வந்திருக்கிறார். கேஷ் டிபார்ட்மெண்டில் இனி மேலும் டோக்கன் எண்களை உரக்கக் கூவ வேண்டியதில்லை. இப்போது அதற்கான எலெக்ட்ரானிக் சாதனம் வந்து விட்டது. கவுண்டரில் நிழலாடி லக்ஷ்மிநாராயணன் நிமிர்கிறான். வெளியே பிரான்ஸிஸ் ராஜ் வணக்கம் வைத்துச் சிரித்து நிற்கிறான்.

தேக்கிய கோபத்தில் முன்னம் ஒரு முறை டைரக்டர் விஸ்வநாத ரெட்டி சொன்ன வார்த்தைகள் லக்ஷ்மிநாராயணனுக்கு நினைவு வருகின்றன. அலைந்து, அலைந்து என்றேனும் ஒருநாள் அவனுக்குத் தற்கொலை எண்ணம் வரும். அன்றைக்கு அவன் வரட்டும். அப்போது பார்க்கலாம். அலுவலுக்கிடையே சுரேஷ் பாபுவைக் கவுண்டரில் அமர்த்தி, லக்ஷ்மிநாராயணனும், பிரான்ஸிஸ் ராஜூம் டைரக்டர் விஸ்வநாத ரெட்டியின் வீட்டுக்குக் கிளம்புகிறார்கள்.

கேட்டிலிருந்து வாசல் வரைக்கும் இடைவெளிகளில் புல் காய்ந்த - உடைந்த சிமெண்ட் பாதை. ஒரு பக்கம் கம்பி அறுந்து தொங்குகிற 'நாய்கள் ஜாக்கிரதை'. காற்றில் சோகமாய் அசைகிற அசோக மரங்கள். வெளியே பளபளக்கிற கார்கள் இல்லை. பராமரிப்பு இல்லாமல் பச்சைப் பரப்பு தற்போது கட்டாந் தரை ஆகி விட்டது. வாசலில் யாரும் இல்லை. கிழிந்த கர்ட்டன் காற்றில் ஆடுகிறது. வரவேற்பறையில் உடைந்த நாற்காலியில் டைரக்டர் விஸ்வநாத ரெட்டி அடையாளம் புரியாமல் நீர் தேங்கிய கண்களில் விழிக்கிறார். இரண்டரை வருடங்களுக்கு முன்னால் பக்கவாதத்தில் ஒரு பக்கம் விழுந்து போனதிலிருந்து அவர் அப்படித்தான் இருக்கிறார். அவர் தெலுங்குப் படம் எடுத்துக் கொண்டிருப்பதாய் அனைவரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அலமாரியில் கேடயங்கள் மங்கிக் கிடக்கின்றன. உலகின் எல்லாக் கேடயங்களுமே ஒருநாள் அப்படித்தான்.



''பொண்ணு பிடிக்கலேங்கிறதை மாப்பிள்ளை வீட்டார் நாசூக்காச் சொல்லிட்டுப் போயிட்டாங்க!''

''எப்படி....?''

''அவங்க வீட்டுக்கு ஒரு நாள் டிபன் சாப்பிட வரச் சொன்னாங்க!''

- ஞா. ஞானமுத்து

லக்ஷ்மிநாராயணன் அரைகுறையாய்ச் சாப்பிட்டுத் தூங்கப் போகிறான். இத்தனை சீக்கிரம் அவன் தூங்கப் போகிறவனே இல்லை. விஜயலக்ஷ்மி வெற்றிலை மடித்து அவனிடம் கொடுக்கிறாள். எப்போதும் போல் அவ்வமயம் அவள் விரலைக் கடிக்கிற முயற்சிகளை லக்ஷ்மிநாராயணன் மேற்கொள்ளவே இல்லை. விஜயலக்ஷ்மி தயங்கிக் கொண்டே அவனிடம் ஒரு கேள்வி கேட்கலாமா என அனுமதி கேட்கிறாள்.

''என்ன?''

''குட்டி படிக்கிற ஸ்கூல்ல டீச்சர் வேலை காலியாயிருக்காம். நாளைலேர்ந்து நான் வேலைக்குப் போகட்டுமா?''

(தொடரும்)

# இந்தியக் கடலில் சுறா மீன்கள்!

கடந்த இருபது ஆண்டுகளில் மாலத் தீவுகளுக்கு வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை கணிசமாக உயர, அந் நாட்டுக்கு நிறைய அன்னியச் செலாவணி கிடைத்துக் கொண்டிருக்கிறது. மாலத் தீவுகளுக்கு வரும் அயல்நாட்டுப் பயணிகளை அதிகமாகக் கவர்வது - சுறாமீன்கள்! சுற்றுலாப் பயணிகளில் 35 சதவிகிதம் பேர் கடலில் 'டைவிங்' செல்லும் ஆர்வமுடையவர்கள். அந்த வீர விளையாட்டினூடே சுறா மீன்களை, அபாயமின்றிக் காண ஏற்பாடுகள் செய்யப் பட்டிருப்பதால் அவர்களுக்கு ஏகப்பட்ட 'த்ரில்'.

ஒரு சுறா மீனைப் பிடித்து விற்று முப்பது அமெரிக்க டாலர்கள் சம்பாதிக் கலாம். அதே சுறாமீனைக் காண வரும் சுற்றுலாப் பயணிகளின் வருகையில் ஆயிரக்கணக்கான டாலர்கள் அந்நியச் செலாவணி கிடைக்கிறது. அதனால் சுற்றுலாப் பயணிகள் 'டைவ்' செய்யும் பகுதிகளில் சுறா மீன்களை வேட்டையாடுவது தடைசெய்யப் பட்டுள்ளது.

மீன் வகைகளுள் மிகப் புராதனமான ஒன்று சுறா. சுமார் 350 மில்லியன் ஆண்டு களுக்கு முன் இவை உலகில் தோன்றியிருக்கக் கூடும் என்று கருதப் படுகிறது. பெரும்பாலான சுறா மீன்கள் கடலில்தான் வசிக்கின்றன என்றாலும் 'கங்கை சுறா' போன்ற சில வகைகள் ஆற்று நீரிலும் காணப் படுவதுண்டு. மீன்களுக்கு எலும்புக் கூடு உண்டு. ஆனால் எலும்புகளுக்குப் பதிலாக, கலபத்தில் வளைந்து நிமிரக் கூடிய 'கார்டிலேஜ்' என்ற பொருளால் ஆனது சுறாவின் உடம்புக் கூடு! இந்துமகாக் கடலில் காணப்படும் சுறாக்கள் 2-4 மீட்டர் நீளம் வரை இருக்கும். திமிங்கல சுறா (whale shark) என்ற ரகம் மிகப் பெரியது - ஆனால் இதனால் பொருளாதார ரீதியில் பலன் குறைவு. புலிச் சுறாதான் (tiger shark) மிக ஆபத் தானது. மனிதர்களைத் தாக்கும் ரகம் இதுதான். இதைப் பிடித்து விற்றால் நல்ல விலை கிடைக்கும் - சுமார் அறுநூறு கிலோ எடை வரை வளரக்கூடியது.

சராசரியாக முந்நூறு மீட்டர் ஆழத்தில் சுறாக்கள் காணப்படும் (Thresher shark போன்ற) சில ரகங்கள் 450 மீட்டர் ஆழம் வரை செல்லக்கூடியவை. சுறா மீன்கள் தாவர உணவையும் விரும்பி உட் கொள்ளும். பல்வேறு நீர்வாழ் ஜந்துக்கள் தவிர, மீன் வலை, பிளாஸ்டிக் பைகள் போன்றவையும் வெட்டப்பட்ட சுறாக்களின் வயிற்றில் கண்டெடுக்கப் பட்டுள்ளன!

ஐம்பது முதல் அறுபது சதவிகிதம் வளர்ச்சி யடைந்த நிலையில் சுறாக்கள் பருவ மடைகின்றன. பெண்



சுறாக்கள் பாலூட்டிகளைப் போல் குட்டி போடுகின்றன. புலிச் சுறா மட்டும் முட்டை வடிவ உறைகளுக்குள் குட்டிகளைக் கருப்பையில் வளர்த்து ஈனுகின்றன. ரகத்தைப் பொறுத்து, சுறா மீன்கள் ஓர் ஈற்றில் எட்டு முதல் 135 குட்டிகள் வரை ஈனும்.

பிற மீன்கள் ஒரே ஈற்றில் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் முட்டைகள் இடுவதை ஒப்புநோக்கினால் சுறாக்களின் இன விருத்தி வேகம் குறைவுதான். மேலும் அவை எத்தனை



* சுத்தியல் தலைச் சுறா

* பட்டுச் சுறா



* புலிச் சுறா



* சாட்டையடிச் சுறா

காலத்துக்கு ஒருமுறை கருவுறுகின்றன என்பதும் உறுதியாகத் தெரியவில்லை. இதன் காரணமாகவே அவை அதிகமான அளவில் வேட்டையாடப்பட்டால் கலப மாகவும் விரைவாகவும் பூண்டோடு அழிந்து போகும் ஆபத்து மிக அதிகம்.

சுறாமீன்களைப் பிடிப்பது 1950 களில் வழக்கத்துக்கு வந்தது. ஆரம்பத்தில் அவற்றின் துடுப்புகளை (கைகளைப் போன்ற உறுப்புகள்) மட்டும் வெட்டி எடுத்துக் கொண்டு உடலைத் தூக்கி எறிந்து விட்டார்கள். காரணம் - மிகச் சுவையான மீன்களாகக் கருதப்பட்ட டியூனா, பில்ஃபிஷ், வாஹு போன்ற வகைகளைப் பாதுகாத்து வைக்க மட்டுமே மீன்பிடி படகுகளில் குளிர்பதன இடவசதி அமைந்திருந்தது. ஆனால் இந்த சுவையான ரகங்கள் கிடைப்பது அரிதானதும் சுறா மீன்களுக்கு மவுசு பெருக ஆரம்பித்தது.

மீன்பிடிக்கும் தொழில் நுட்பமும் வலைகளின் தரமும் உயர்ந்த பிறகு புலிச் சுறாக்களைக் கூட பிடிக்க ஆரம்பித்தனர். டால்ஃபின் மாமிசத்தைத் தூண்டிலில் கட்டி வீசி, பிடிபட்ட சுறாக்களைச் சங்கிலிகளால் இழுக்கும் முறை இப்போது மாலத் தீவுகளில் கையாளப்படுகிறது. அப் பகுதிகளில் ஏற்கெனவே சுறா மீன்களின் எண்ணிக்கை குறைந்து விட்டதால் முன்பை விட மிக ஆழமாகத் தேடினால்தான் சுறாக்கள் கிடைக்கின்றன.

விசாகப்பட்டினம் பகுதியிலோ, பொழுது சாயும் நேரத்தில் மீன் பிடி படகுகளுடன் கடலுக்குள் பிரவேசிக்கும் மீனவர்கள் சுறாக்களுக்கு நூற்று தூண்டில்கள் போடுகிறார்கள்! பொழுது விடிவதற்குள் கணிசமாகப் பிடித்து விடுகிறார்கள். பதினைந்து நாட்களில் சுறாவின் துடுப்பை மட்டுமே விற்று எழுபத்தைந்தாயிரம் ரூபாய் வரை இந்த மீனவர்கள் கூட்டாகச் சம்பாதிக்கிறார்கள். துடுப்புகள் வெட்டப்பட்ட சுறா மாமிசம் படகுகளின் தரையில் வெறுமனே கிடத்தி வீணாக்கப்படுகிறது.

மீனவர்களுக்கு நல்ல லாபம் என்றாலும் அதிகரித்து வரும் சுறா வேட்டை குறித்து விஞ்ஞானிகளும் அதிகாரிகளும் கவலை கொண்டிருக்கிறார்கள்.

வங்காள விரிகுடா பகுதியில் இலங்கை, தென் கொரியா, தைவான் போன்ற நாடுகள் இணைந்து சுமார் 11 முதல் 13 ஆயிரம் டன் சுறா மீன்களை ஆண்டுதோறும் பிடிக்கின்றன.

அமெரிக்காவில் கூட, சுறா மாமிசத்தைப் பயன்படுத்திச் சில புதிய உணவு வகைகளை அறிமுகப்படுத்திய பின், பிடிக்கப்படும் சுறாக்களின் எண்ணிக்கை அதிகரித்து விட்டது. எனவே ஆண்டொன்றுக்கு மூவாயிரம் டன்னுக்கும் கூடுதலாக சுறாக்களைப் பிடிக்கக் கூடாது என்ற சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது.

ஆஸ்திரேலியாவிலும் சுறா மீன் இனத்துக்கு நேர்ந்துள்ள ஆபத்து உணரப்பட்டு அதைப் பாதுகாக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

தமிழ்நாட்டின் சைனீஸ் உணவகங்களில் கூட சுறா துடுப்பு சூப் கிடைப்பதில்லை! எல்லாமே ஏற்று மதிக்குத்தான் போகிறது. நாளொன்றுக்கு 25,000 டாலர் மதிப்புள்ள சுறா துடுப்புகள் சென்னை விமான நிலையத்திலிருந்து வெளியேறுகின்றன! பங்களாதேஷ், இலங்கை, மாலத் தீவுகள் ஆகியவற்றின் சுறா அறுவடையில், பெரும் பகுதி தாய்லாந்து, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குத்தான் போகின்றன. அந்த நாடுகள் அவற்றை உணவாகப் பயன் படுத்தியது போக, மிச்சத்தைப் பதப் படுத்தி மேற்கத்திய நாடுகளுக்கு விற்று வருகின்றன! சமீப காலமாக சுறா துடுப்புகளின் விலை பன்மடங்கு ஏறியுள்ளது. அவை கிடைப்பதற்கு அரிதாகி வருவதே காரணம்.

இந்தியாவில் சுறா மருந்து தயாரிப்புக்கும் பயன்படுத்தப்படுகிறது. அதன் கல்லீரலை வேக வைத்து எண் ணெயைப் பிரித்தெடுத்து shark-liver மாத்திரைகள் தயாரிக்கிறார்கள். வேடிக்கை என்னவெனில் இந்த மாத்திரைகளில் செயற்கை வைட்டமின் ஏ, டி சத்துக்கள் சேர்க்க வேண்டியுள்ளது!

ஜப்பானியர்கள் மாலத் தீவிலிருந்து சுறா எண்ணெய் வாங்கி, அழகு சாதனங்கள் தயாரிக்கப் பயன்படுத்து கின்றனர். மாலத் தீவிலோ அந்த எண் ணெய்யை மீன் பிடிப் படகுகளுக்குப் பூச்சாகப் பயன்படுத்துகின்றனர்.

எனவே உணவாகவும் வேறு பல வகைகளிலும் உபயோகிக்கப்படும் சுறா மீனுக்கு நாளுக்கு நாள் ஆபத்து அதிகரித்து வருகிறது. அவற்றைக் காப்பாற்ற இயற்கைச் சமநிலை வல்லுனர்கள் விழிப்புணர்வுடன் வழிகாட்ட வேண்டும்.

- பே ஆஃப் பெங்கால் நியூஸ்



## அட, அப்படியா!

!! கென்னத் ஆர்னால்ட் ஒரு விமான பைலட். இவர் ஒருமுறை விமானம் செலுத்திக் கொண்டிருந்த போது, சில அடையாளம் தெரியாத பறக்கும் உபகரணங்களைக் கண்டார். தண்ணீரின் மேல் பரப்பில் பட்டும் படாமலும் தட்டுகளை வீசினால், அவை எப்படி துள்ளியபடி செல்லுமோ அதே போல் இந்தப் பறக்கும் உபகரணங்கள் பயணம் செய்ததாகக் கூறினார் ஆர்னால்ட். 1947, ஜூன் 24 அன்று இவர் அளித்த இந்த வர்ணனையே 'flying saucers' (பறக்கும் தட்டுக்கள்) என்ற பெயர் அமையக் காரணமாயிற்று.

!! 'டைடானிக்' என்ற பிரும்மாண்டமான கப்பல் மூழ்கி விட முடியாதபடி பாதுகாப்பு அமைப்புடன் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது. எனினும் திடீரென்று ஒரு நாள் இக் கப்பல் மூன்று மணி நேரத்துக்கும் குறைவான காலத்தில் முற்றிலும் மூழ்கி விட்டது! அந்தச் சமயத்தில் அதில் எத்தனை பேர் பயணம் செய்து கொண்டிருந்தார்கள் என்பது திட்டவட்டமாக யாருக்கும் தெரியாது. என்றாலும் 1500க்குக் குறைவில்லை என்று கருதப்படுகிறது.

!! ஏப்ரல் 18, 1962 அன்று அமெரிக்காவின் நிவேடா மாநிலப் பகுதியில், இரவு ஏழரை மணிக்கு அணுகுண்டை வெடித்தது போன்ற ஒளியுடன் ஆகாயத்தில் ஒரு மிகப் பெரிய வெடிச் சப்தம் கேட்டது. அந்த அதிர்ச்சியில் சுற்று வட்டாரத்தில் பல மைல்களுக்கு பூமி அதிர்ந்தது. ஒளிக்கும், வெடிச் சப்தத்துக்கும் அதிர்வுக்கும் என்ன காரணம் என்பது இதுநாள் வரை தெரியவில்லை; ஆராய்ந்து பார்த்தும் கண்டுபிடிக்க முடியவில்லை!

!! பிரிட்டிஷ் கொலம்பியாவிலுள்ள பழங்குடி இனத்தவர் (Kwakiutl Indians) தங்கள் பெயரை அடகு வைத்துக் கடன் வாங்குகிறார்கள். கடனைத் திருப்பிச் செலுத்தும் வரை பெயரற்றவர்களாக விளங்குகிறார்கள்!

!! ஒரு பூகம்பம், தொடர்ந்து பெரும் மழை. அதைத் தொடர்ந்து நகரின் எல்லா நீர் நிலைகளும் வற்றிப் போக, மீன்களெல்லாம் செத்தன. சிங்கப்பூரில், இதே வரிசையில் விநோத நிகழ்வுகள் நடந்தது 1861 இல்.

!! 'Ivan the Terrible என்று சரித்திரப் புகழ் பெற்று விட்ட ரஷ்யக் கொடுங்கோல் மன்னன், நாடு நகரமெல்லாம் ரகசியப் படை வைத்திருந்தான். அதனால் அவன் ஆட்சிக் காலத்தில் 'walls and mice have ears' என்ற பழமொழி உண்டாயிற்று. தன்னையும் தன் ஆட்சியையும் கவிழ்க்கத் திட்டமிட்ட ஆயிரக்கணக்கானவர்களைக் கைப்பற்றி மரண தண்டனை அளித்தான் ஐவன்.

## மணமகன் நடக்க முதுகுப் பாதை!

!! திருமணத்துக்கு வரும் விருந்தினர் அனைவரும் குப்புறப்படுத்துக் கொள்ள, மணமகன் அவர்களுடைய முதுகுகளின் மேல் நடந்து சென்று மாமனார் வீட்டுக்குள் நுழைவான். திருமணம் முடிந்து வெளியே வரும் போது மீண்டும் இதே போல் முதுகு மேல் நடை பயில்வான் மணமகன்! தெற்கு பசிஃபிக் கடலில் Marquesas தீவுகளில் நடக்கிறது இந்த விநோதமான திருமணச் சடங்கு!



தொகுப்பு :
உதய்லால்

# பாண்டியன் மகள்

**இதுவரை...**

**தனது ஆசான் கவிநாராயண பட்டரிட்ட பணியொன்றை நிறைவேற்றுவதற்காகக் காஞ்சியிலிருந்து பொதிகைக் கூற்றத்திற்குப் புறப்பட்ட அரையன் மதுராந்தகன், பாண்டிய இளவரசன் மாறவர்மனால் கடத்தப்பட்ட சோழ இளவரசி அம்மங்கை தேவியை மீட்டு, அரண்மனையில் சேர்க்கிறான். பாண்டியரின் வசமான மேலைமங்கலத்தையும் தனது திட்டத்தால் சுலபமாக மீட்டுத் தருகிறான். அரையனின் வாள்வீச்சுத் திறமையையும் யுத்த தந்திர முறைகளையும் பார்த்த சோழ இளவல் விக்கிரமன் தோழனாகிறான். இளவரசி அம்மங்கை தேவி காதல் கொள்கிறாள். ஆபத்து மிகுந்த பொதிகைக் கூற்றத்திற்கு அரையன் புறப்பட்ட போது, கண்களில் நீர்மல்க விடை தருகிறாள் அம்மங்கைதேவி.**

## 6. மலைச்சரிவில் ஒரு மாளிகை

சேர நாட்டின் எல்லைப் பகுதியில் நீண்டு கொண்டேயிருந்த மலைத் தொடர் சற்று இடைவெளி கொடுத்து விலகி, சிறு கணவாயொன்றை உருவாக்கியிருந்தது. அதன் சரிவில் காடா, நந்தவனமா என்று கூற இயலாதபடி மரங்களும் இடையே கொத்துக் கொத்தாக வண்ண மலர்களுடன் செடி கொடிகளும் காற்றில் ஆடி நின்றன. அந்த மண்ணுக்கே உரித்தான பலா மரங்களும் தூரத்துச் சமவெளியில் நிறைந்திருந்தன. மலர்ச் செடிகளுடன் பல மூலிகைகளும் அதிகமாக வளர்ந்து கிடந்ததால் அந்தப் பகுதியில் ஒருவித மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. இந்தப் பசுமைச் சூழலினூடே ஒரு பாதை வளைந்து வளைந்து சென்றது. அந்தப் பாதையின் முடிவில் அழகிய சிறு மாளிகையொன்றும் எழுந்து நின்றிருந்தது.

சிறு ஊரை விட்டு விலகித் தனித்து அமைந்திருந்த அந்த மாளிகை, பார்வைக்கு அழகிய சித்திரம் வரைந்தது போலிருந்தது. மலைச் சரிவில் நடந்து சென்ற கிராமத்து மக்கள், அந்த மாளிகையை விட்டு விலகியே நடந்தார்கள். மாளிகையின் வாயிலில் நின்றிருந்த காவலர்கள் எவரையும் அங்கு அனுமதிப்பதாக இல்லையென்பதை அவர்கள் பார்வையே உணர்த்தியது. எப்போதும் பலமாகவே வீசிக் கொண்டிருந்த மலைக் காற்று, அந்த மாளிகைக்கு ஒரு குளிர்ச்சியை அளித்துக் கொண்டிருந்தது.

சாளரமொன்றின் அருகே நின்று வெளியே நோக்கிக் கொண்டிருந்த மாறவர்மனுக்கு வெளியே விரிந்த இயற்கையை ரசிக்கவோ, மலைக் காற்றை அனுபவிக்கவோ மனமில்லை. அவன் எண்ணம் யாவும் மேலைமங்கலத்தில் நடந்த நிகழ்ச்சிகளிலேயே மூழ்கிக் கிடந்தன. அவ்வப்போது அவன் இடது கரம் உயர்ந்து, தோளிலிருந்த காயத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டது.

யார் அந்த வீரன்? அனாயாசமாகத் தன்னையும் தனது வீரர்களையும் சாய்த்து விட்டு இளவரசியை மீட்டவன்? அவன் தான் மேலைமங்கலத்தில் மார்த்தாண்டனையும் சோமசுந்தரனையும் படைகளுடன் சிதறடித்தவன் என்றும் பிறகு தெரிய வந்தது மாறவர்மனுக்கு. மிகுந்த சிரமப்பட்டுச் சிறையெடுத்த இளவரசியையும், கைப்பற்றிய கோட்டையையும் ஒரே நாளில் மீட்ட அந்த வாலிபனைப் பற்றிய நினைவில் ஆழ்ந்திருந்தான் மாறவர்மன்.



சிந்தனையில் மூழ்கிக் கிடந்த மாறவர்மன், அறைக்குள் நுழைந்து, பெருமூச்சு விட்டபடியே அமர்ந்த சோமகந்தரனின் குரலைக் கேட்டுத் திரும்பினான். அவனுடன் பேசிக் கொண்டே உடன்வந்த மார்த்தாண்டனும் சற்று ஆசுவாசப்படுத்திக் கொள்ள இருக்கையில் அமர்ந்தான். இருவரது முகத்திலும் வியர்வை துளித்திருப்பதையும், இருவரது மூச்சும் பலமாக வந்து கொண்டிருப்பதையும் கவனித்த மாறவர்மன், ''சென்ற காரியம் என்னவாயிற்று?'' என்று கேட்டான்.

மீண்டும் ஒருமுறை மூச்சை நீள இழுத்து வெளிவிட்ட சோமகந்தரன், ''ஏறக்குறைய முடிந்த மாதிரிதான்'' என்றான்.

''முடிந்த மாதிரியென்றால்?'' மாறவர்மன் வினவினான்.

''உத்தமபாளையத்தின் எல்லையிலிருந்து, மலைக்கணவாய் வரை உள்ள பகுதியையும் கோட்டாறு வரை உள்ள குமரியின் பகுதியையும் கேட்கிறான் சேரலாதன்.''

''நாம்தான் அதற்கு ஏற்கெனவே ஒப்புக் கொண்டாயிற்றே. அதற்குப் பிரதியாக என்ன செய்யப் போகிறான்?''

''கோட்டாற்றுப் போரில் நமக்கு உதவியாக நாலாயிரம் வீரர்களையும் குமரிப் பகுதியில் பத்துக் கலங்களும் அளித்து உதவுவதாகக் கூறுகிறான்.''

''அங்கு கடற்படைத் தளமேதும் இருப்பதாகத் தெரியவில்லையே?''

''புதிதாக ரகசியத்தளம் ஒன்று அமைத்திருப்பதாகவும் கூறுகிறான். ஆனால் அதன் இருப்பிடத்தைத் தற்போது வெளியிட இயலாதாம்!''

**சோ**மகந்தரன் முகத்தில் விஷமப் புன்னகை ஒன்றும் தோன்றியது. ''மாறவர்ம பாண்டியருக்குப் புதிய உறவுகள் ஏற்படப் போவதாகத் தெரிகிறது'' என்றான் புன்னகையினூடே.

மாறவர்மன் முகத்தில் ஆவல் பிறந்தது. ''என்ன கூறுகிறாய் சோமகந்தரா?'' என்று கேட்ட அவன் குரலிலும் ஆவல் ஒலித்தது.

''தளபதியே கூறட்டும்'' என்ற சோமகந்தரன் முகத்தில் இன்னும் அதிகமாக விஷமம் படர்ந்தது.





"இது என்ன குடுகுடுப்பைக்காரர் வீட்டுக் கல்யாணமா?"

"எப்படிச் சொல்றீங்க?"

"செருப்புத் திருடுபவன் ஒரு வாரத்தில் இரத்தம் கக்கிச் செத்துப்பூடுவான்னு வாசலில் போர்டு வெச்சிருக்குதே!"

- எஸ். ரமேஷ்

அதுவரை மௌனமாக இருந்த மார்த்தாண்டன், மூடியிருந்த தன் கண்களைத் திறந்து மாறவர்மனை நோக்கினான். அவன் விழிகளில் சற்றுக் கனிவும் இருந்தது.

"உண்மைதான் மாறவர்மா. ஈழத்துத் தண்டநாயகன் வீரபாகுவும், இளவரசி அஞ்சனாதேவியும் சேரலாதர் அரண்மனையில் வந்து தங்கியிருக்கிறார்கள். உனக்கு ஈழத்து இளவரசியை மணமுடிப்பதன் மூலம் நீண்ட காலத்திற்கு முன் விட்டுப் போன பாண்டியர் உறவைப் புதுப்பித்துக் கொள்வதும் நாம் சுதந்திரமான பாண்டிய நாட்டைப் பெற உதவுவதும் அவர்கள் நோக்கம்."

"அப்படியானால் கொற்கையிலேயே நம்மைச் சந்தித்திருக்கலாமே" என்று வினவினான் மாறவர்மன்.

மாறவர்மன் குரலில் புதிய உற்சாகம் பிறந்திருந்தது.

"உண்மைதான் மாறவர்மா. அவர்கள் அங்கு வருவதாகத்தான் திட்டமிட்டிருந்திருக்கிறார்கள். ஆனால் கொற்கைப் படையை விக்கிரமன் முறியடித்த பின்னர், கொற்கையில் பாதுகாப்புக் குறைவு என்பது அவர்கள் எண்ணம். நமக்குச் சேரலாதர் உதவ முன்வந்திருப்பதை அறிந்ததால் இங்கு வந்திருக்கிறார்கள்" - விளக்கினான் மார்த்தாண்டவர்மன்.

மாறவர்மன் முகத்தில் கனவு விரிய ஆரம்பித்தது. அதை இன்னும் அதிகரிக்க சோமசுந்தரனது வார்த்தைகள் தூபமிட்டன.

"மாறவர்மரே, இதுவரை நாம் அடைந்த தோல்விகளை வெற்றிகளாக மாற்றியமைப்போம். வரும் இந்த வாய்ப்பை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டால், சேரலாதர் உதவியும் ஈழத்து உதவியும் கிட்டும். குலோத்துங்கனும் அவன் படைகளும் இல்லாத இந்தத் தருணமும் நமக்குச் சாதகமாகத்தான் இருக்கிறது" என்றான் சோமசுந்தரன்.

வாசலில் பணிப்பெண்ணொருத்தி வந்து நின்று கதவை லேசாகத் தட்டினாள்.

"வரலாம்" என்று குரல் கொடுத்தான் மாறவர்மன்.

உள்ளே நுழைந்து வணங்கிய பணிப்பெண் ஓலையொன்றைக் கொடுத்தாள். கைநீட்டிப் பெற்றுக் கொண்ட மார்த்தாண்டன் அதைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான்.

மற்ற இருவர் முகத்திலும் எதிர்பார்ப்பு நிலவியது.

ஓலையைப் படித்து முடித்த மார்த்தாண்டன், "சேரர் கடற்படைத் தலைவர் இன்னும் இரண்டு தினங்களில் இங்கு வருகிறார்" என்று அறிவித்தான்.

தங்களுக்குத் தங்குவதற்கு அந்த அழகிய மாளிகையையும், அழைத்த குரலுக்கு ஓடி வரப் பணியாளர்களையும் கொடுத்திருந்த சேரர் கடற்படைத் தலைவன் தனித்து வருகிறானா அல்லது ஈழத்துத் தண்டநாயகனையும் உடன் அழைத்து வருகிறானா என்று தெரியாததால் தான் பேச வேண்டிய முறைகளைப் பற்றி ஒரு தீர்மானத்திற்கு வந்த மார்த்தாண்டன், மாறவர்மனை நோக்கி, "மாறவர்மா, கடற்படைத் தலைவனிடம் அனைத்தையும் நானே பேசிக் கொள்கிறேன். நீ நடுவில் எந்தவித குழப்பத்தையும் ஏற்படுத்த வேண்டாம்" என்றும் எச்சரித்தான்.

இரண்டாவது நாள் காலைப் பொழுதில் அதிக ஆரவாரமின்றி அந்த மாளிகையில் நுழைந்த சேரர் கடற்படைத் தலைவன் கங்காதரனைக் கண்ட மாறவர்மன் முகத்தில் வியப்பு பரவியது. கொடூர மனம் படைத்தவன், முன்கோபி என்றெல்லாம் சேரர் கடற்படைத் தலைவனைப் பற்றிப் பரவியிருந்த பிரபாவங்களுக்கும் அவன் தோற்றத்திற்கும் முற்றிலும் தொடர்பில்லாமலிருந்தது. சாதாரண உயரத்தில் மெலிந்த ஆனால் திடமான சரீரத்துடனும் மிக மென்மையாகவும் அதே சமயம் உறுதியுடன் ஒலித்த குரலுடனும் உள்ளே வந்த கங்காதரனின் விழிகளில் மட்டும் விபரீத ஒளியொன்று வீசியது. அவன் கச்சையில் உடைவாளேதும் காணப்படவில்லை. பதிலாகச் சேர நாட்டின் அபாயகரமான ஆயுதமான செண்டு ஒன்று இருந்தது.

கூடத்திலிருந்த இருக்கையிலமர்ந்து பேச்சை மிக இனிமையாகத் தொடங்கிய கங்காதரன், "மார்த்தாண்டரே, தங்களுக்கும் பாண்டிய இளவலுக்கும் இங்கு அனைத்தும் வசதியாயிருக்கிறதல்லவா?" என்று விசாரித்தான்.

"ஆகா, எந்தக் குறையும் எங்களுக்கு இல்லை" என்று கூறிய மார்த்தாண்டன் நேரிடையாக விஷயத்திற்கு வந்தான்.

"கங்காதரரே, சேரலாதரிடம் கலந்து பேசி விட்டீர்களா?" என்று வினவினான்.

''உங்களுக்கு உதவ மன்னர் ஒப்புக் கொண்டு விட்டார். முன்பு கூறியபடி எமது ஏற்பாட்டுக்கு நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?''

''ஒப்புக் கொள்கிறோம்'' மாறவர்மன் குரலும் மார்த்தாண்டன் குரலும் சேர்ந்து ஒலித்தன.

''மகிழ்ச்சி'' என்று கண்கள் பளிச்சிடக் கூறிய கங்காதரன், ''இன்னும் நான்கு தினங்களில் நீங்கள் மன்னரைக் காணலாம். ஈழத்துத் தண்டநாயகரும் உங்களுக்காகக் காத்திருக்கிறார்'' என்றான்.

''போரில் அவர்கள் உதவுவது பற்றி தங்களுக்கு ஏதும் தெரிவிக்கவில்லையா?'' மார்த்தாண்டன் மீண்டும் வினவினான்.

''திட்டவட்டமாகத் தற்போது ஏதும் நான் சொல்வதற்கில்லை. திருமணத்திற்கு நீங்கள் ஒப்புக் கொள்வீர்களானால் அதைப் பற்றி மேற்கொண்டு பேசலாம்.''

''கரும்பு தின்னக் கூலியா வேண்டும்?'' என்ற மாறவர்மனைக் கண்களால் அடக்கிய மார்த்தாண்டன், ''கங்காதரரே, நாங்கள் எப்போது மன்னரைக் காண வர வேண்டும்?'' என்று கேட்டான்.

''நாளை மறுநாள் நீங்கள் புறப்பட்டுத் தலைநகருக்கு வரலாம்'' என்ற கங்காதரன், ''நான் இன்று மாலையே திரும்ப வேண்டும்,'' என்று கூறியபடி எழுந்தான்.

**அ**ம்மங்கை தேவிக்கு உணவும், உறங்கும் பஞ்சணையும், பாலும் தேனும் கசந்தன. சாதாரணமாக இனிமையூட்டும் அனைத்துமே அவளிருந்த மனோநிலையில் அவளுக்குக் கசந்து வழிந்தன.

விடைபெறுமுன் ஆலயத்தில் தன்னிடம் உரையாடிய அரையன், தங்களிடையே இருந்த தாரதம்மியத்தைப் பற்றிப் பேச முற்பட்டதும் தான் பதிலேதும் கூறாது கோபத்துடன் வெளியேறியதையும் தான் சென்ற ரதத்தைப் பார்த்தபடியே நீண்ட நேரம் சிலையாக அவன் நின்றிருந்ததையும் மீண்டும் மீண்டும் எண்ணித் தன்னையே நொந்து கொண்ட அம்மங்கைக்கு வாழ்வே கசந்தது. பணிப் பெண்களிடம் எரிந்து விழுந்து கொண்டிருந்தாள். காரணமற்ற அவள் கோபங்களுக்குப் பணிப்பெண்கள் பலியாகிக் கொண்டிருப்பதைக் கண்ட புவனமாதேவி, தனது கேள்விகளுக்கும் அவளிடமிருந்து சரிவர பதில் வராததால் ஏதும் செய்யச் சக்தியற்றவளானாள்.

ஆடலிலோ பாடலிலோ எந்த அக்கறையும் காட்டாத அம்மங்கை, நித்தியப்படி செய்யும் பணி ஒன்று மட்டும் தொடர்ந்தது. வைகுந்தன் ஆலயத்திற்குக் காலையிலும் மாலையிலும் சென்று வைகுந்தன் சன்னிதியில் நீண்ட நேரம் கண்களில் நீர் மல்க அவள்

## அருள்வாக்கு

கண்ணாடியில் முகம் பார்க்கிறோம். அழுக்காக இருந்தால் பார்க்க முடிகிறதா? சுத்தமாகத் துடைத்து விட்டுப் பார்த்தால் நன்றாகத் தெரியும். சுத்தமாகத் துடைத்த கண்ணாடிதான் என்றாலும் கூட, அது ஆடிக் கொண்டிருந்தால் பிம்பம் விளங்காது. அது சுத்தமாகவும் இருக்க வேண்டும்; ஆடாமல் நிலையாகவும் இருக்க வேண்டும். சுத்தமான, ஆடாத கண்ணாடியாக இருந்தால்தான் உண்மை பிரகாசிக்கும். சித்தம் என்பது கண்ணாடி போன்றது. பரம்பொருள் ஒன்றே உண்மை. கெட்ட எண்ணம் தோன்றாவிட்டால் சித்தக் கண்ணாடி சுத்தமாகும். ஒன்றிலேயே அதை ஈடுபடுத்தினால் அது ஆடாமல் நிலைத்த கண்ணாடியாகும். அப்போது தான் பரமாத்மா அதில் பிரதிபலிப்பார்.



தாமிரச் செம்பு நிறைற்றில் பத்து வருஷங்கள் கிடந்து விட்டது என்றால் அதை எத்தனை தேய்த்தாக வேண்டும்? எவ்வளவுக்கு எவ்வளவு தேய்க்கிறோமோ, அவ்வளவுக்கு அது வெளுக்கிறது, சுத்தமாகிறது. இவ்வளவு வருஷ காலம் எத்தனை கெட்ட காரியங்களைச் செய்து நம்முடைய சித்தத்தில் அழுக்கை ஏற்றிக் கொண்டு விட்டோமோ, அந்த அழுக்கைப் போக்க அத்தனை நல்ல காரியங்களைச் செய்து தேய்க்க வேண்டும். நல்ல கர்மாநுஷ்டானங்களைச் செய்ய வேண்டும். அதனால் சித்த சுத்தி வரும். நல்ல சிலங்கள் உண்டாகும்.

சரி, இன்றைக்குச் செம்பைத் தேய்த்து வெள்ளை வெளேர் என்று ஆக்கி விட்டோம் என்றால் சரியாகி விட்டதா? நாளைக்கு, அதற்கு மறுநாள் என்று மறுபடி அதைத் தேய்க்காமலிருந்தால் என்ன ஆகும்? மறுபடியும் அழுக்காகிறது. இதே போல் நாம் சித்தத்தையும் விடாமல் அநுஷ்டானத்தால் சுத்தம் செய்து கொண்டேயிருக்க வேண்டும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

நிற்பதைக் கவனித்த புவனமகாதேவி, அந்த வைகுந்தனே அவள் துயரத்தைப் போக்கும் வழியைக் காட்டட்டும் என்று தீர்மானித்தாள்.

அரையனைப் பற்றிய செய்தி ஏதும் கிடைக்காமல் தவித்த அம்மங்கை, மன ஆறுதல் தேடி ஆலயம் சென்று திரும்பிய ஒரு சமயம், பல்லவராயரிடம் பேசிக் கொண்டிருந்தான் ஒரு வீரன். அவர்கள் பேச்சில் அரையன் பெயர் அடிபடுவதைக் கேட்ட அம்மங்கை அங்கேயே நின்றாள்.

அந்த வீரன் தொடர்ந்து கூறிக் கொண்டிருந்தான் : ''கொட்டுந்தளத்திற்குச் செல்லும் பாதையை அடுத்த வனப் பகுதியில் எங்களைக் காத்திருக்குமாறு பணித்தார்.''

''கொட்டுந்தளம் சேரன் கோட்டையல்லவா?''

''ஆம் பிரபு. பொதிகைக் கூற்றத்தின் தலைவன் சமீபத்தில் இறந்து விட்டதாகவும், கொட்டுந்தளத்திலும் அதிக சேர வீரர் இல்லையென்றும் அனைவரும் சேரன் தலைநகருக்குச் சென்றிருப்பதாகவும் அறிந்தோம் பிரபு.''

''எப்படி?''

''எங்களிடம் ஒரு சேர ஒற்றன் சிக்கினான்; அவனைத் தனிப்பட விசாரித்தார் தலைவர்.''

''பிறகு?''

''பிறகுதான் எங்களைக் காட்டின் மத்தியில் காத்திருக்கக் கூறிவிட்டு அவர் மட்டும் தனித்துப் பொதிகைக் கூற்றத்திற்குச் சென்றார்.''

''அந்தச் சேர ஒற்றன் என்ன ஆனான்?''

''அவனை ஜெயந்தனிடம் ஒப்படைத்து விட்டுத்தான் சென்றார்.''

அரையன் சென்றிருப்பது ரகசியமானதும், அபாயகரமானதுமான பணி என்பதை உணர்ந்த பல்லவராயர், அதை வாய் விட்டுக் கூறவும் செய்தார். ''எதிரியின் கோட்டைக்குத் தனியே அவன் செல்லச் சரியான காரணமிருக்க வேண்டும். எப்படிப்பட்ட காரணமாயிருந்தாலும் இது மிகவும் அபாயகரமான முயற்சி. எதற்கும் ஜெயந்தனை எச்சரிக்கையுடன் இருக்கச் சொல்.''

''உத்தரவு பிரபு'' என்று விடைபெற்று வணங்கிய வீரன் வெளியேறத் திரும்பினான். அவனுடன் சேர்ந்து திரும்பிய அமைச்சர், வாயிலில் அம்மங்கை நிற்பதைக் கண்டு திகைத்தார். தாம் கூறியது முழுமையும் அவள் கேட்டிருப்பாள் என்பதைப் புரிந்து கொண்ட அமைச்சர், அவளுக்கு ஆறுதல் கூற வார்த்தைகளின்றித் தடுமாறினார்.

வீரன் கூறிய தகவல்களையும் அமைச்சரின் மறுமொழிகளையும் முற்றிலுமாகக் கேட்டிருந்த அம்மங்கை, அபாயகரமான பணியை மேற்கொண்டு அரையன் தனித்துச் சென்றிருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்டவளாக அமைச்சரை ஏறிட்டு நோக்கியவள், அவர் தனக்கு ஆறுதல் கூற முயற்படுமுன்னர் விடுவிடுவென்று அரண்மனையின் உட்புறத்தை நோக்கி நடந்து விட்டாள். எத்தனை சிறந்த வாள் வீரரென்றாலும் சேரன் கோட்டைக்குள் தனித்துச் சிக்கிக் கொண்டால் மீள்வது சிரமம் என்பது தெளிவாகப் புரிந்ததால் அவள் இதயத்தில் புயல் வீசலாயிற்று. பஞ்சணையில் விழுந்து சப்தமின்றிக் குலுங்கி அழுதாள்.

அதே நேரத்தில் காஞ்சி வரதன் சன்னிதியில் ஒரு பெண்மணி அரையனுக்காகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். தலை முழுதும் நரையோட, முதுமை காரணமாக மிகவும் தளர்ந்து போயிருந்தாலும் அம்மாதுவிடம் ஒரு கம்பீரமும் முகத்தில் அருளும் நிறைந்து காணப்பட்டன. பார்த்தவுடன் மனதில் ஒரு மதிப்பையும் மரியாதையையும் ஏற்படுத்துவதாக இருந்தது அவள் தோற்றம்.

நீண்ட நேரமாக வரதன் சன்னிதியில் நின்றிருந்த அந்த மாது, மெல்ல சுயநிலை பெற்றுத் தன் விழிகளைத் துடைத்துக் கொண்டாள். ''வரதா, அந்த வீரன் அரையன் மதுராந்தகன் சென்றுள்ள பணி வெற்றி பெறவும், என் மகள் மீண்டும் எனக்குக் கிடைக்கவும் நீதான் அருள்புரிய வேண்டும்'' என்று அவள் உள்ளம் பிரார்த்தித்தது. மெல்லத் திரும்பி நடந்தாள் அந்த மாது.

சற்றுத் தொலைவில் அந்த மாது திரும்பி வரக் காத்திருந்த கவி நாராயண பட்டரின் சீடனொருவன் பாதுகாவலாகச் சற்றுத் தள்ளியே அவள் பின் நடந்தான்.

அதே கணத்தில் அம்மங்கையின் கவலைக்கும் அந்த வயோதிக மாதின் பிரார்த்தனைக்கும் உரியவனான அரையன் மதுராந்தகன், சேரனுடன் சேர்ந்து படையெடுக்க உத்தேசித்திருந்த மார்த்தாண்டனின் திட்டத்தையும் அதற்கான ஏற்பாடுகளையும் அடியோடு குலைக்கப் பொதிகைக் கூற்றத்தை நெருங்கிக் கொண்டிருந்தான்.

(தொடரும்)



''அந்த கட்சிக்காரங்க உண்ணாவிரதம் இருந்த இடத்துலே பிரியாணி சோறு, எலும்புத் துண்டு... இதெல்லாம் இறைஞ்சு கிடக்கே...?''

''அவங்க இருந்தது 'அடையாள உண்ணாவிரதம்' ஆச்சே...!''

– சீர்காழி வி. ரேவதி

# ராக்காயி கோயில்



மூச்சுக்கு முந்நூறு தடவை 'என் ஜாதி, என் ஜாதி' என்று பொம்மு நாயக்கர் விஜயகுமார் லவுட் ஸ்பீக்கர் இல்லாத குறையாய் அலறுகிறபோதே முடிவு தெரிந்து விடுகிறது. அதன்பின் அடிக்கடி வரும் கொட்டாவிகள் தவிர்க்கக்கூடியதாக இல்லை. ஆனால் ஒன்று. படம் முழுக்க தௌஸண்ட் வாட் ஜொலிப்புக் காட்டுகிறவர் விஜயகுமார் மட்டுமே. கண், மீசை, உதடு, ரோமங்களிலெல்லாம் நடிக்கிறார்.

நீங்கள் கேட்கலாம், என்னடா இது. போட்டோவில் இத்தனை பெரிதாகச் செல்வா படம் போட்டு விட்டு இன்னும் ஒரு வார்த்தை சொல்லவில்லையே என்று. என்ன சொல்வது? திருவாரூர் தேர் பக்கத்தில் தென்னங்குரும்பைத் தேர் வைத்தாற் போல, அவரும் இருக்கிறார்!

கஸ்தூரி தேவலை. ஆனால் அவர் அடிக்கடி பல்லைக் காட்டி பயமுறுத்துவதுதான் இடிக்கிறது.

கொஞ்சமாவது திருப்தி தருவது கேமரா. கிராமத்துப் படம். குளுமைக்குப் பஞ்சமில்லை.

மூணு நாலு பாடல்கள். சரணம் முடிவதற்குள் பல்லவி மறந்து விடுகிறது. இசை இருக்கிறது. ஆனால் இளையராஜாதான் இல்லை.

படம் ஆரம்பித்த, பதினைந்தாவது நிமிஷத்திலிருந்தே உடம்பு நெளிய ஆரம்பித்து விடுவதற்குக் கண்டிப்பாக, மூட்டைப்பூச்சி மட்டுமே காரணமில்லை!

– ஆர்.பி.ஆர்.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி, பிப்ரவரி 10,20, 1943

### அட்டைப்பட விளக்கம்

சிலை பிளாங்காவில் சந்தித்துப் பேசிய நேசக் கட்சியின் இரு பெரும் பிரமுகர்கள் நமது இந்த இதழ் அட்டையை அலங் கரிக்கிறார்கள். மிக்க ஆவலுடன் யாருடைய வரவையோ எதிர்பார்த் துக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிற தல்லவா? ஒருவேளை ஸ்டாலினைத்தான் அப்படி எதிர்பார்த்தார் களோ, என்னவோ? ஆனால், அந்த இரும்பு மனிதன், ''கடிக்கிற நாய் குரைக்காது'' என்னும் பழமொழிக்கு இணங்க, ''எனக்கு இங்கே காரியம் இருக்கிறது; வெறும் பேச் சுக்கு நேரமில்லை'' என்று செய்தி அனுப்பி விட்டார். இதனால் சர்ச்சிலும் ரூஸ்வெல்ட் டும் அவ்வளவாக ஏமாற்றமடைந்திருப் பார்கள் என்று நினைப்பதற்கும் இடமில் லைதான். ''பூஜை வேளையில் (ருஷியக்) கரடி வராததே நல்லதாய்ப் போயிற்று'' என்று அவர்கள் ஒருவேளை சந் தோஷங்கூட அடைந்திருக்கலாம்.



- அட்டைப்பட விளக்கம்

### தேசிகர் கச்சேரி

தேசிகர் ஸ்வரம் பாடுவதில்லை; பல்லவி பாடுவதில்லை. ஆலாபனமும், நிரவலும் விஸ்தாரமாகச் செய்வதில்லை. ஆனாலும், கோகலே ஹாலில் அவருடைய கச்சேரி மூன்று மணி நேரத்துக்கு மேல் திவ்யமாய் நடந்தது; சபையோர் கடைசி வரையில் இருந்து கேட்டு அநுபவித் தார்கள். பாடியவர் ஸ்ரீ தண்டபாணி தேசி கராகவும், அவர் பாடியவை பெரும் பாலும் தமிழ்ப் பாட் டுக்களாகவும் இருந் தபடியால்தான் இது சாத்தியமாயிற்று.



ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனங்கள் இரண்டைத் தவிர, மற்றபடி தமிழ் உருப்படிகளாகவே சுமார் பதினேழு உருப்படிகள் தேசிகர் பாடினார். அப்படி யும் சபையோர் அலுக்கவில்லை! அதற்கு மேல் இன்னும் வேண்டுமென்று தமிழ்ப் பாட்டுக்களின் முதலடிகளை நாலாபுறத்தி லிருந்தும் கூவிக் கொண்டிருந்தார்கள்!

அன்னிய பாஷை உருப்படிகளை மட்டும் இப்படி வரிசையாகப் பாடிக் கொண்டு போயிருந்தால், ஒன்றரை மணி நேரத்தில் சபை காலியாகியிருக்கும்.

தேசிகர் காம்போதி ராகத்தை வெகு நிறைவுடன் ஆலாபனம் செய்து சபையில் 'ஹாஹா'காரம் உண்டாக்கினார். இதி லிருந்து, அவர் மனது வைத்தால் எல்லா ராகங்களையுமே பிரம்மானந்தமாக ஆலா பனம் செய்யலாமென்று தெரிந்தது.

ஸ்ரீ தண்டபாணி தேசிகருக்கு ஏற் கெனவே ''இசையரசு'' என்ற பட்டம் வழங் கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் புதுச்சேரியில் தேசிகர் கச்சேரி செய்த போது, ''தேவார மணி'' என்ற பட்டத்தை இசை அன்பர்கள் அளித்தார்களாம். பட்டங்கள் எவ்வளவு வேண்டுமானாலும் தேசிகருக்கு அளிக் கலாம்; தாங்கக்கூடிய பெரிய தோள்கள் தான்.

- ஆடல் பாடல் - ''கர்நாடகம்''

### 21 நாள் உண்ணாவிரதம்

அறுபது வயதுக்குப் பிறகு சாதாரணமாய் எல்லாரும் ஓய்வு எடுத்துக் கொள்வது வழக்கம். மகாத்மாவுக்கு வயது எழு பத்து நாலு ஆகிறது. இந்த வயதில் தேச விடுதலை யைக் கருதி மகாத்மா இருபத்தோரு நாள் உண் ணாவிரதம் ஆரம்பித் திருக்கிறார். இது மகாத்மா தமது வாழ் நாளில் தேசத்துக்காக மேற்கொள்ளும் ஐந்தா வது உபவாசமாகும். ''நேற்றை விட இன்று காந்திஜியின் நிலைமை மோசமாயிருக்கிறது'' என்று படிக்கும் போது நமக்குக் கதிகலங்குகிறது.



''நிலைமை விபரீதமாவதற்கு முன் அதிகார வர்க்கத்தின் கல் மனது கரையுமா? மகாத்மா விடுதலையடைவாரா?'' என்னும் கூக்குரல் தேசத்தில் நாலா பக்கமும் எழுகின்றது. கடவுளின் சித்தம் எப்படியிருக்கிறதோ?

- அட்டைப்பட விளக்கம்

## உயிர்ப்பிச்சை கொடுங்கள்!

**கா**ந்தி மகான் சிறைவாசத்துக்குப் பயந்தவரல்ல. இதற்கு முன் எத்தனையோ தடவை தாமே சிறைவாசத்தைக் கோரித் திருப்தியுடன் அநுபவித்திருக்கிறார்.

அத்தகைய சத்தியாக்கிரஹி இந்தத் தடவை சிறையிலிருந்து விடுதலை கோரி உபவாசம் இருக்கிறார்.

ஏனெனில், தாம் சமரச முயற்சி செய்யத் தயாராயிருக்கையில் தம்மைப் பிடித்துச் சிறைக்கு அனுப்பியது அவருக்குத் துக்கத்தை அளித்திருக்கிறது. சமரச முயற்சி செய்வதற்கு இடங்கொடாமல் தம்மைச் சிறைப்படுத்தியது அவர் மனதைப் புண்ணாக்கியிருக்கிறது.

மகாத்மா புருஷோத்தமர்; அஹிம்சையின் வடிவம்; யாருக்கும் தீங்கு நினையாத புண்ணிய புருஷர்; அவருடைய மனதைப் புண்படுத்துவதினால் பிரிட்டனுக்கு க்ஷேமம் உண்டாகாது.

ஆகையால், அவரை உடனே விடுதலை செய்யுங்கள்.

- தலையங்கத்தில் ஒரு பகுதி

## உஷ்! பேசாதே!

**மனைவி** : ''ஏங்க? இப்படி நெய் டப்பாவிலே 'விளக்கெண்ணெய்'ன்னு எழுதறீங்களே!''

**செட்டியார்** : ''ஐயோ, கத்தாதே. எலிங்க நடமாட்டம் ஜாஸ்தின்னு உனக்குத் தெரியாது?''



## டாக்டர் உத்தரவு

**கோவிந்தன்** (பிச்சைக்காரனைப் பார்த்து) : ஏண்டா! கொஞ்ச நாளாய்ப் பார்க்கிறேன், நீ எந்த வீட்டிற்கும் போகாமல் நம்ம வீட்டிற்கே வருகிறாயே! வேறு ஒருவர் வீட்டிற்கும் போகக் கூடாதோ?

**பிச்சைக்காரன்** : டாக்டர் அப்படித்தான் உத்தரவு போட்டாருங்க.



**கோவிந்தன்** : என்னடா அந்த உத்தரவு?

**பிச்சைக்காரன்** : உடம்புக்கு ஒத்துக் கொள்கிற ஆகாரத்தைச் சாப்பிடச் சொன்னாருங்க.

- எம். டி. ராதா கிருஷ்ணன்

- காலக்ஷேபம்

## பார்த்திபன் கனவு



**இ**துவரையில் நானும் எவ்வளவோ நாவல்களும் கதைகளும் படித்திருக்கிறேன். என்ன படித்திருந்தாலும் தங்களுடைய பார்த்திபன் கனவைப் படித்த பிறகு அதற்கு ஈடு அதைத் தவிர வேறு இல்லை என்று சொல்லத் தோன்றுகிறது. இரண்டு தரம் படித்தும் மனம் கேட்கவில்லை. மூன்று தரம் படித்தேன். இன்னும் படிக்கத் தூண்டுகிறது.

*(மூன்று தடவை படித்ததற்காக மூன்று பங்கு சந்தா கேட்கவில்லை! - ஆசிரியர்)*

- வட்டமேஜை

# நக்ஸல்-போலீஸ் யுத்தம்!

**எம்.** எல்.ஏ. பாலராஜு* நக்ஸலைட்டுகளால் பிணைக் கைதியாக்கப்பட்டது தான் இன்று பரபரப்பாகப் பேசப்படுகிறது. என்றாலும் சென்ற மாத இறுதியில் (ஜனவரி 27) போலீஸ் டி.ஐ.ஜி. வியாஸ் நக்ஸலைட்டுகளால் சுட்டுக் கொல்லப்பட்டதை யாரும் இதற்குள் மறந்திருக்க முடியாது.

ஹைதராபாத் போலீஸ் கன்ட்ரோல் கட்டடம் அருகே, பரந்த லால்பகதூர் ஸ்டேடியம்; மாலைச் சூரியன் மங்காத நேரம். மனைவி அருணாவுடன் சென்று ஜாக்கிங் செய்து கொண்டிருந்தார், வியாஸ். பத்து நிமிடங்களுக்கு முன்பு சக போலீஸ் அதிகாரி தினேஷ் ரெட்டி, வியாஸிடம் நக்ஸலைட்டுகளின் ஹிட்-லிஸ்டில் அவர் இருப்பதைப் பற்றி எச்சரிக்கை செய்து விட்டுச் சென்றிருந்தார். நூற்றுக்கு மேற்பட்ட விளையாட்டு இளைஞர்களும், பெண்களும் வியர்க்க வியர்க்க தேகப் பயிற்சி செய்து கொண்டிருக்கிற அரங்கம். வியாஸின் இரு மெய்க்காவலாளர்கள் நுழைவாயில் அருகே பாதுகாப்புக்கு. இவ்வளவுக்கு நடுவில்தான் வியாஸைச் சுட்டுக் கொன்றனர், நக்ஸலைட்டுகள்.



* இறந்து போன வியாஸுக்கு இறுதி அஞ்சலி செலுத்த வருகிறார் விஜயபாஸ்கர ரெட்டி



* வியாஸ்

நக்ஸலைட்டுகளுடன் போராடி அவர்களது ஹிட் லிஸ்டிலும் இடம்பெற்றிருந்த ஒருவர் பகிரங்கமாக ஜாக்கிங்குக்காக ஏன் பொது இடத்துக்கு வந்திருக்க வேண்டும் என்பது புரியாத புதிர் தான். வீட்டிலேயே தேகப்பயிற்சி செய்யலாம். அல்லது வெளியே செல்ல வேண்டுமானாலும் எப்போது, எங்கே செல்வார் என்று தெரியாத படிக்கு நடந்து கொள்ளலாம். இவையெல்லாம் பிரபலங்கள் பாதுகாப்பில் அடிப்படை விஷயங்கள். ஆயினும் வியாஸ் தினசரி குறிப்பிட்ட நேரத்துக்கு ஜாக்கிங்குக்காக ஸ்டேடியம் வந்திருக்கிறார்!

அவர் தினசரி அங்கு மாலை வருகிறார் என்பதைக் கணக்கிட்டு ஆறு தீவிரவாதிகள் விளையாட்டு உடை அணிந்து ஏமாற்றி உள்ளே நுழைந்துள்ளனர். ஸ்கோர் போர்டு அருகே, மிக அண்மையில் நின்று ஆறு முறை சுட்டனர். சுற்றுவட்டாரத்தில் இருந்த விளையாட்டு வீரர்கள் செயல்படு முன்னரே ஒரு வெடிகுண்டைத் தூக்கி எறிந்து, புகை நடுவே ஓடி, காரில் ஏறி மறைந்தனர்.

**வி**யாஸ், எஸ்.பி. ஆக இருக்கும் போது, 1989-ல் நக்ஸலைட்டுகளை ஒழிக்க ஏற்படுத்தப்பட்ட படைக்குத் தலைமை ஏற்று, தீவிரமாகச் செயலாற்றினார். பல நக்ஸல் தளபதிகளைக் கொன்று வீழ்த்தினார். இயக்கம் சலசலத்தது. '' 'போலீஸ் என்கௌன்ட்டர்' என்ற பெயரில் கோர்ட் விசாரணை இன்றித் தீவிரவாதிகளை வியாஸ் நிர்மூலமாக்குகிறார்'' என்று சிவப்பு இயக்கம் அவரைப் பழிவாங்க நாள் குறித்தது. அதனால் அவரை மாநில போலீஸ் அகாதமி டைரக்டர் என்ற ஒதுக்குப்புறமான பதவிக்கு நியமித்தனர்.

பிறகு நக்ஸலைட் இயக்கம் ஆந்திர அரசால் 'தடை' செய்யப்பட்டது; பார்டர் செக்யூரிட்டி ஜவான்கள் வரவழைக்கப் பட்டனர். நக்ஸலைட் முகாம்கள் தகர்க்கப் பட்டன.

ஜனவரி 27-ஆம் தேதி காலை நிஜாமாபாத்தில் 27 கொலைகளுக்குக் காரணமான மார்க்கண்டேயா என்ற நக்ஸல் தளபதியும் அவர் மனைவி ருக்மா பாயும் போலீஸ்

எதிர்ப்புப் போராட்டத்தில் உயிரிழந்தனர். 25-ஆம் தேதி வாரங்கல் தளம் தலைவர் அஞ்சய்யாவும் அவரது பெண் கூட்டாளியும் ஹைதராபாத் ரகசியக் கூட்டத்தில் கலந்து கொண்டு மாருதி காரில் திரும்புகையில் போலீஸ் குண்டுக்கு இரையானார்கள். அஞ்சய்யாவிடம் கிடைத்த டயரியில் ரகசியக் கூட்ட முடிவுகள், ஹிட் லிஸ்ட் விவரம் இருந்தன!

வியாஸின் கொலையை அடுத்து, மக்கள் போர் அணி, தெலங்கானா காரிய தரிசி ஷியாமின் அறிக்கை இது : ''நெஞ்சில் ஈரமின்றி இயக்கத் தலைவர்கள் ஜலையா, உதவிக்காரர் நாஜுமல்லு முதலியவர்களை வியாஸ் ஒழித்ததற்குப் பழிவாங்கவே இந்தக் கொலை. பஸ்மாகரன் போல அவரது கைவரிசையே அவருக்கு யமனா யிற்று. போலீஸ் நிர்வாகமே, உங்கள் அதி காரத்தைக் காண்பித்தால், வியாஸின் கதி தான் உங்களுக்கும்!''

ஆந்திரத்தில் நக்ஸலைட் இயக்கம் ஒரு தனி ராஜ்யமே நடத்தி வருகிறது. 'ஆயுத முனை ஆளும் வழி' என்ற வன்மைக் குறிக் கோள். பணக்காரர்களை அச்சுறுத்திப் பணம் பறித்தல், ஏழைகளின் நிலம் விழுங் கும் நில உடைமை பிராககளைக் கொல்லு தல், ஒடுக்கப்பட்ட ஏழைகளுக்கு நிலத்தை மீட்டுத் தந்து, பொருள் உதவி புரிந்து, 'ஏழை பங்காளன்' என்கிற இமேஜை பெறு தல் ஆகியவை இந்த இயக்கத்தின் லட் சியம்.

''காங்கிரஸ், தெலுங்கு தேச ஆட்சி களில் நக்ஸலைட்டுகளைப் பதுங்கிய வாழ் விலிருந்து சகஜமான வாழ்க்கைக்குக் கொண்டு வரும் முயற்சிகள் பூரணமாக இல்லை; அதற்கான அணுகுமுறையும் சரியாக இல்லை. போலீஸ் மூலம் அடக்க முற்படுவதன் விளைவுதான் அவ்வப்போது நடக்கும் கொலைகளும் கிட்நாப்களும்'' என்கிறார் ஓர் அனுபவஸ்தர்.

அரசாங்கம் முனைந்து செயல்பட வேண்டும். அடிப்படைப் பலஹீனங்களை நீக்க வேண்டும். ஏழைகளுக்கு நிலங்கள் அளிக்கப்பட்டாலும், பண மூட்டைகள் அவர்களுக்குக் கடன் கொடுத்து, நிலத்தை சுவாதீனப்படுத்திக் கொள்கின்றனர். இதனை முதலில் தடுக்க வேண்டும். இளை ஞர்களை நக்ஸலைட்டுகள் கவராமல் இருக்கக் கல்வி அறிவும், தொழில்முறை வாழ்வும் அளிக்க வேண்டும். எந்தத் திட்டமாக இருந்தாலும் அது முழுமையாக உரிய மக்களுக்குச் சென்றடைகிறதா என் பதுதான் முக்கியம். அப்படி அடையாத வரை இதுபோன்ற தீவிரவாத இயக்கங் களை போலீஸ் மூலம் முழுமையாக ஒழித்துக் கட்டுவதென்பது ஒருபோதும் நடவாது!

- சுபஸ்ரீ

# தப்புக் கணக்கு

"என்னங்க... இங்கே வாங்க. நம்ப கவிதா பச்சைக் கொடி காட்டிட்டாங்க" என்று வைதேகி குரல் கொடுத்த போது, அந்தக் குரலில் பீறிட்டிருந்த உற்சாகம் நாராயணனை உசுப்பிற்று.

"என்ன சொல்றே வைதேகி நீ! இப்ப நீ என்ன இவ்வளவு உற்சாகமாய்ச் சப்தம் போடுறே?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் நாராயணன்.

"நம்ப கவிதா, நாம சொல்ற யாரை வேணாலும் ஏத்துக்க ரெடின்னு சொல்றா!"

குரலில் சந்தோஷத் துள்ளல்கள்.

"அப்படியா?" என்று வெகு சாதாரணமாக அவர் கேட்ட விதம், அவள் சந்தோஷத்தில் பாதியை அமுக்கியது.

'என்ன இவர், பிடி தராமலேயே நழுவி நழுவி ஓடிக் கொண்டிருந்தவள், பொறுப்பை நம்வசம் ஒப்படைத்து விட்டாள் என்று சொல்கிற போது, சந்தோஷப் படாமல் இதென்ன?'

நாராயணனை வியப்பாய் ஏறிட்டாள்.

"ஆமாங்க, சந்தோஷம் தாங்க முடியலே எனக்கு. இப்பத்தானே நம்ம வழிக்கு வந்திருக்கா" என்றாள் அவரை உற்சாகமூட்டும் முயற்சியுடன்.

அவருடைய பார்வை கவிதாவின் திசையில் திரும்பிற்று.

'ஆமாம்ப்பா. அம்மா சொல்றது நிஜம்தான்' என்கிற பார்வையுடன் நின்றிருந்தாள் கவிதா.

நாராயணனிடம் ஓர் அலட்சிய முறுவல் தோன்றி மறைந்தது.

"அப்படின்னா வருண் என்ன ஆனான் கவிதா?" என்று வெகு இயல்பான குரலில் கேட்டார்.

கவிதாவின் விவகாரம் அவர்களுக்கும் தெரியும்.

ஆனால் இதுவரையிலும் வெளிப்படையாகப் பேசிக் கொண்டதில்லை. வைதேகியின் படபடப்பை அவ்வப்போது அடக்கி வைப்பவர் நாராயணன்தான்.

"பொறுமையாய் இரு வைதேகி. காதலிக்கிறப்ப நம்ம அனுமதியைக் கேட்காட்டாக் கூட, கல்யாணம் பண்ற ஸ்டேஜ் வர்றப்ப நம்மகிட்டே வரணும்ல்ல. பார்த்துப்போம்."

"பையன் என்னவோ.. ஏதோ...! நாம்ப முந்திக்கலேன்னா... தப்பாயிடக் கூடாது..."

"அவசரப்படாதே வைதேகி. கவிதா படிச்ச பொண்ணு. உலகம் அறிஞ்ச பொண்ணு நம்மகிட்டே வரட்டும். அப்ப பேசிப்போம். அதுவரை பொறுமையோட இரு."

இப்படித்தான் மனைவியை அடக்கி வைப்பார்.

இப்போது விஷயம் வந்திருக்கிறது. தீர்வு காண வேண்டியதுதானே!

அப்பாவின் கேள்விக்கு உடனடியாய்ப் பதில் கூறாத கவிதா சற்றே தாமதித்து விட்டு,

"அவரை இப்ப நான் விரும்பலேப்பா. அதான்" என்றாள் தெளிவான குரலில்.

"ஏன் கவிதா? என்ன காரணம்...?" என்று கேட்டவரை மடக்க முன்வந்தாள் வைதேகி.

"என்ன இது, அவதான் விரும்பலேன்னு சொல்றாளே. அப்புறம் விட்டுட்டுப் போக வேண்டியதுதானே! ஏன் போட்டுத் துளைக்கணும்? இனிமேல் ஆக வேண்டியதைப் பார்க்காமல், பழசைப் போட்டுக் கிண்டிக்கிட்டு..." என்று முறைத்தாள் கணவனை.

சிரிப்பாலும் பார்வையாலும் மனைவியை அடக்கியவர், "என்ன காரணம் கவிதா, வருணை ஏன் வேணாம்கிறே?" என்று மிருதுவாகக் கேட்டார்.





''அவரை உங்களுக்குத் தெரியுமாப்பா?'' என்று திருப்பிக் கேட்டாள் நாராயணனிடம்.

''வருணைத் தெரியாது. ஆனால் கபிதாவை நல்லாத் தெரியும்!'' என்றார் சிரிப்புடன் நாராயணன்.

''என்னப்பா நீங்க இப்படிச் சொல்தீங்க?'' என்று சிணுங்கலுடன் கேட்டாள் கபிதா.

''காரணத்தைக் கேட்டால், அவரைத் தெரியுமான்னு கேட்கிறியே பின்னே? சரி, இப்ப சொல்லு, வருணை எனக்கு அறவே தெரியாது. நீ காரணத்தைச் சொல்லு. முன்னே நீயே விரும்பி லவ் பண்ணின ஒருத்தனை, இப்ப நீயாவே வேணாம் கிறியே ஏன்? அவன் ஏழைன்னு தெரிஞ்சும் விரும்பி லவ் பண்ணப் போனவ நீ? இப்ப திடீர்னு புறக்கணிக்கிறியே ஏன்?''

''அவர் ஏழை மட்டும்தான்னு எண்ணினேன், கோழையாவும் இல்ல இருக்கார்.''

''கோழையாகவா?''

''அது மட்டும் இல்லே, தன்னம்பிக்கை பிடிச்ச ஆளாவும்!''

''ஓ! எப்படி இதையெல்லாம் எடை போட்டே?''

''ஆரம்பத்திலேர்ந்தே எங்களோட காதல் நிறைவேற முடியாதுன்னு பயம். அப்படியே நிறைவேறினாலும் அவராலே, என்னைச் செழிப்போட வச்சுக்க முடியாதோன்னு தயக்கம். இப்படி ஒவ்வொண்ணுக்கும் தயங்கித் தயங்கி நின்றால்...?''

நாராயணன் சிரித்தார்.

''என்னப்பா சிரிக்கிறீங்க?''

''பின்னே உன்னை மாதிரியா எடுத்தேன், கவிழ்த்தேன்னு நிற்கிறது?''

''அப்பா...!''

''பின்னே என்னம்மா, வருணை நீயாவே ஓடிப் போய்க் காதலிச்சே! இப்பவும் நீயாவே விலகுறேன்னா இப்படித் தானே அர்த்தம்!''

''உண்மைதான்ப்பா. அவரை முழுக்க அறிஞ்ச பிறகுதான்...''

''இன்னமும் நீ அவனை முழுமையாய்ப் புரிஞ்சுக்கலேம்மா.''

''எதை வச்சுப்பா சொல்றீங்க?''

''உன்னை வச்சுத்தான். உன் இயல்பை வச்சுத்தான்...''

''அப்பா...''

''ஆமாம் கபிதா. இன்னமும் நீ குழந்தையாத்தான் இருக்கே. இந்த உலகம், வாழ்க்கை இதெல்லாம் குறிச்ச யதார்த்தமான சிந்தனை உனக்கு வரலே இன்னும். ஆனா, வருண் இப்படி இல்லாததாலேதான் இப்ப உங்களுக்குள்ளே டக் அஃப் வார்! வசதியான வீட்டுப் பொண்ணான உன்னைப் பண்ணிக்கிட்டா, உனக்கொரு வசதியான வாழ்வைத் தர முடியாம போயிருமேன்னு தயங்குறான்...''

''கரெக்ட்! இப்படியேதாம்ப்பா! இதை எண்ணியே மறுக்கிறார்.''

''பின்னே, பொறுப்பும் அக்கறையும் உள்ள ஆண் மகன் எப்படி நடக்க முடியும், இப்படித்தான்! எவன் ஒருத்தன் மயக்கத்துக்கு ஆட்பட்டுடாம, இது மாதிரி பொறுப்பாச் சிந்தனை எல்லாம் பண்ணத் துவங்கிட்டானோ, அவனை முழுசா நம்பலாம். ஏத்துக்கிட்ட பொறுப்பைச் சரியாய் முடிக்கிற பொறுப்பு, இது மாதிரி ஆளுங்ககிட்டேதான் கரெக்ட்டாய் இருக்கும். உன்னை அவனுக்குப் பண்ணிக் கொடுத்தால், உன்னை ஒரு பூ மாதிரி வச்சுப்பான்ம்மா...''

''அப்பா!''

''நான் அவனைப் பார்த்ததே இல்லே. ஆனால் இப்படிக் கணிக்க எப்படி முடிஞ்சதுன்னு பார்க்கிறியா? எல்லாம் உன்னோட ஸ்டேட்மென்டை வச்சுத்தான். பிறந்தது முதல் உன்னைப் பார்த்துட்டே வர்ற ஆளாச்சே நான்! இதுமாதிரி பொறுப்பாய்ச் சிந்தனை பண்ற வருண் எனக்கு மருமகனாய் வரலாம்ன்னு நான் தீர்மானம் பண்றேன். நீ?''

அப்பாவைப் பார்க்கத் தயங்கிய கபிதா, தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

''ஹூம்... எப்படியோ போங்க...'' என்று தன்னைக் கழற்றிக் கொண்டாள் வைதேகி.

''நாளைக்கு மீட் பண்றப்ப, நல்ல நாள் பார்த்து முறைப்படி பெண் பார்க்க வரச் சொல்லு. நான் சொன்னேன்னு சொல்லு'' என்றார் நாராயணன்.

உமாகல்யாணி

# பாலம்

●● சிவில் சர்வீஸ் - பிரிலிமினரி பரீட்சை (CIVIL SERVICE - PRILIMINARY EXAM) எழுதத் தேவையான புத்தகங்கள் வைத்திருப்பவர்கள் தெரிவிக்கவும். பரீட்சை எழுதி அனுபவம் உள்ளோரின் வழிகாட்டலும் தேவை.

- மு. மாரி ராஜா,
"ஹோட்டல் வசந்தம்"
120, காந்தி பஜார்,
செஞ்சி, தெ. ஆ. (மாவ) - 604 202.

●● காளான் வளர்ப்பு பற்றிய அனைத்து விவரங்களும் அறிய விரும்புகிறேன். ஆலோசனை, வளர்ப்பு முறைகள் குறித்துத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்.

- கி. சந்திரசேகரன்,
முசரவாக்கம், (அஞ்சல்),
காஞ்சிபுரம் வட்டம்,
செங்கை எம்.ஜி.ஆர். மாவ - 631 554.

●● திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரி கணிதத் துறை முன்னாள் தலைவர் (மறைந்த) பிரான்சிஸ் ராஜ் எழுதியுள்ள நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், புத்தகங்கள், நோட்ஸ் வைத்திருப்போர் கொடுத்து உதவினால் நகல் எடுத்துக் கொண்டு திருப்பித் தருகிறேன். விலைக்குப் பெறவும் தயார். அன்னாரின் பேரன் நான்.

- அம்ரீஷ்,
141 A, காலனி மெயின் ரோடு,
கிராப்பட்டி, திருச்சி - 12.

●● தொழில் அனுபவம் உள்ளவர்களோடு சேர்ந்து முதலீடு செய்து விளம்பரக் கம்பெனி தொடங்க விருப்பம். தொடர்பு கொள்க :

- திருமதி திருமேனி,
16, L4/1, 28வது குறுக்கு தெரு,
பெசன்ட் நகர்,
சென்னை - 600 090.

●● Sterile distilled water தயாரிப்பதற்கான தொழில்நுட்பம், மற்றும் செயல்முறைத் திட்டம் ஆகியவற்றை அளிக்கக் கூடியவர்கள் தொடர்பு கொள்க :

- வெ. சம்பத்,
அக்ராவரம் கிராமம்
(அஞ்சல்),
குடியாத்தம் வட்டம்,
வ.ஆ.அ.மா. - 632 601.

●● 'இல்லஸ்டிரேட்டட் வீக்லி ஆஃப் இந்தியா'வில் வெளியான, பிராமணர்களின் பூர்விகம், பிரிவுகள் சம்பந்தமான சுமார் இருபது ஆண்டுகளுக்கு முற்பட்ட கட்டுரை இருப்பின் ஜெராக்ஸ் அனுப்பி வைக்கவும். செலவை ஏற்கிறேன். நன்றி.

- ஆர். வேங்கடராமன்,
மருத்துவ அதிகாரி,
அரசு ஆரம்ப சுகாதார நிலையம்,
நத்தகாடையூர் - 638 108.

●● அம்புஜம் கிருஷ்ணா பற்றி "பிராஜெக்ட் ஒர்க்" (project work) செய்கிறேன். அவரது வாழ்க்கை வரலாறு, இசைத் தொண்டு, இதர செய்திகள், அவரைப் பற்றிய நூல்கள், கட்டுரைகள் முதலியன இருக்குமானால் உடனே அனுப்பி வைத்து உதவவும்.

- வெ. ரமாப்ரியா,
முதுகலை இரண்டாம் ஆண்டு,
ஸ்ரீ ஸத்குரு சங்கீத வித்யாலயம்,
கோகலே சாலை, மதுரை- 625 002.

●● வேலையில்லாப் பட்டதாரி ஆசிரியர் சங்கம், திருவிடைமருதூர், உறுப்பினராகச் சேர விரும்புவோர் தொடர்பு கொள்ள முகவரி :

- வி. ஜி. மனோகரன்,
செயலாளர்,
38, மெயின் ரோடு,
வேப்பத்தூர் - 612 105.

●● கடந்த 25.1.93 திங்கள் மதியம் 1:30 மணி அளவில் பார்த்தசாரதி சுவாமி கோயில் சென்று திரும்பும் போது அல்லது 4 மணி அளவில் கபாலீஸ்வரர் தரிசனம் முடித்து திரும்பும் போது என் தோல் பையைத் தொலைத்து விட்டேன். பஸ்ஸில் விட்டிருக்கலாம். பிரெஞ்சு நாட்டுக் கொடி பொறிக்கப்பட்டது. ரூ 500 பணம், நிறைய முகவரிகளுடன் டயரி மற்றும் சில ஆவணங்கள் இருந்தன. பை யாரிடமாவது கிடைத்திருந்தால் தொடர்பு கொள்ளவும். டயரியும் பையும் மட்டும் எனக்கு அனுப்பி வைத்தாலும் போதும்!

- எஸ். ருத்ரபதி,
ஓய்வு பெற்ற போஸ்ட் மாஸ்டர்,
197, பாரதியார் சாலை,
கோவில்பத்து,
காரைக்கால் - 609 605.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது.)



## அதிகாரிகள் ஊழல் அம்பலம்!

**அ**திகாரிகளின் ஊழலை அம்பலப்படுத்தியதற்காக ஓர் இதழ் ஆசிரியர் ஆறு மாத சிறைத்தண்டனை பெற்றார். இதழில் எழுதியதற்காக சிறைத் தண்டனை பெற்ற முதல் தமிழ் ஆசிரியர் இவரே. ... இவ்விதழைக் கண்டு நடுங்காத அலுவலர் அந்த நாளில் இல்லை. ...வெளியூர் களில் பிரதி ஞாயிற்றுக் கிழமை காலை நேரத்தில் மக்கள் காலணாவைக் கையில் வைத்துக் கொண்டு 'ஜனானு கூல'னை (1890) வாங்கிப் படிக்கக் காத்திருப்பது வழக்கம். இவர் மீது வழக்கு நடந்த போது, வழக்கை நடத்த வாசகர்கள் பணம் அனுப்பி உதவினார்கள். திருவையாறு பிரகரம். ஆசிரியர் த. வை. கிருட்டினதாக. விலை கால்அணா. (அன்றைய கணக்கு : 12 பைசா = 1 அணா; 16 அணா = 1 ரூ.)



• "குரு பரம்பரை பிரபாவம்" (1818) இதழில் ஆண்டாள் ஓவியம் (மரச் செதுக்கு)

# காந்திஜிக்கு தமிழ் கற்பித்தவர்

## பறையன் (1894)

**மா**தம்... பிறகு வாரம். ஆதிதமிழர் இதழ். ஆசிரியர் இரட்டை மலை சீனி வாசன்... தென்னாப்பிரிக்கா சென்று காந்தி யடிகளுக்கு மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றினார். தமிழும் கற்றுக் கொடுத் தார். "மோகன்தாஸ் காந்தி" என்று தமிழில் கையெழுத்துப் போடக் கற்பித்தவர் இவரே... 1923இல் சென்னைக்குத் திரும்பிய இரட்டைமலை சீனிவாசன் நீதிக் கட்சித் தலைவர்களில் ஒருவராக விளங்கினார்.

## மதுவிலக்கு தூதன் (1899)

**மா**தம். சென்னை. ஆசிரியர் ஒ. மானியல். தமிழில் முதல் மதுவிலக்கு இதழ். விற்பனை 500 படிகள்... 1929 இல் 'விமோசனம்' என்ற மதுவிலக்கு இதழை இராஜாஜி நடத்தினார்.

## திருவாங்கூர் அபிமானி (1877)

**ப**ஞ்ச காலத்தில் 'கஞ்சி இல்ல'ங் களை அரசு அமைத்திருந்தது. அது பற்றி இந்த இதழ் எழுதியது: "மக்கள் கஞ்சி இல்லங்களுக்குச் செல்வ தில்லை. அங்கு கொடுமைப் படுத்தப்படுகிறார்கள். மக்கள் சிறு திருட்டுக்கள் நடத்திச் சிறைசெல்லவும் விரும்புகிறார்கள். சிறையில் நல்ல சாப்பாடு கிடைக்கும் என்று மக்கள் எண்ணுகிறார்கள்."

## முதல் இந்தியர்

"**மா**சத் தின சரிதை" என்ற தமிழ் இதழ் 1812 ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்திய மொழியில் வந்த முதல் இதழ் இதுவே. ஞானப்பிரகாசம் என்ற தமிழர் இந்த இதழை நடத்தினார்.

ஆனால், வரலாற்று ஆசிரியர்கள் 1816 இல் வங்காளத்தில் "வங்காள கெசட்டு" நடத்திய கங்காதரப் பட்டாச்சார்யாதான் இதழ் நடத்திய முதல் இந்தியர் என்று எழுதி வைத்திருக்கிறார்கள்.

## பைசா இதழ்

**1859** இல் வெளிவந்த 'தர்மப் பள்ளி



• "ஜனவினோதினி" (1880) இதழில் வெளிவந்த "புகைக்கூண்டு" (பறக்கும் பலூன்).

போதம்' என்ற தமிழ்த் திங்கள் இதழ் ஒரு பைசாவுக்கு விற்கப்பட்டது. ஆண்டுச் சந்தா ஒரு அணா. இந்தியாவில் ஒரு பைசாவுக்கு விற்கப்பட்ட முதல் இதழ் இதுவே.

– பாலன் பூங்குழலி

**இவ்வாறு பல புராதன இதழ்கள் பற்றிய சுவையான தொகுப்பு : 19-ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள் - ஆசிரியர் : அ. மா. சாமி, - வெளியீடு நவமணி பதிப் பகம், 12, 2வது பெருந்சாலை, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை - 4. விலை ரூ 75.**

# சக்கரவர்த்தித் திருமகன்

## 23. கோபமும் சமாதானமும்

ராமன் கௌசல்யா தேவியின் மனைக்குச் சென்றான். அங்கே பிராமணர்கள், விருந்தினர்கள், ஸ்திரீகள் எல்லாரும் சந்தோஷமாகப் பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்துக் கொண்டு கூடியிருந்தார்கள். மூன்றாம் கட்டுக்குள் கௌசல்யா தேவி வெண்பட்டு உடுத்தி, ஓமத்தீயில் நெய் விட்டுக் குமாரனுடைய க்ஷேமத்திற்காகத் தேவதைகளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். ராமன் வந்ததும் எழுந்து அவனை ஆலிங்கனம் செய்து, உச்சிமோந்து யுவராஜா ஆகப் போகும் குமாரனுக்குத் தகுந்த ஒரு நல்ல ஆசனத்தைக் காட்டி உட்காரச் சொன்னாள்.

''அம்மா! எனக்கு இந்த ஆசனம் தகாது. கீழே தர்ப்பைப் புல் பரப்பி உட்கார வேண்டிய தபஸ்வி நான். தங்களுக்கு வருத்தம் தரக்கூடிய சமாசாரத்தைக் கொண்டு வந்திருக்கிறேன்; பொறுத்துக் கொண்டு என்னை ஆசிர்வதிக்க வேண்டும்'' என்று கூறிச் சுருக்கமாக நடந்த விஷயத்தை ராமன் கௌசல்யைக்குச் சொன்னான்.

''அரசர் இராஜ்யத்தை பரதனுக்கு அளிக்க விரும்புகிறார். நான் பதினான்கு வருஷம் தண்டகாரண்யத்தில் வனவாசம் செய்ய வேண்டும் என்று அரசருடைய ஆணை. உங்களிடம் சொல்லி விடைபெற்றுக் கொண்டு இன்றே நான் செல்ல வேண்டும்'' என்றான்.

இதைக் கேட்டதும் வாழை மரம் அறுபட்டுக் கீழே விழுவது போல் கோசலை தரையில் விழுந்தாள். லக்ஷ்மணனும் ராமனும் அவளையெடுத்துத் தடவிக் கொடுத்து உட்கார வைத்தார்கள்.

''என் இதயம் இரும்போ? கல்லோ? நான் இன்னும் உயிருடன் இருக்கிறேனே!'' என்று மகனைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

லக்ஷ்மணனுக்குக் கௌசல்யா தேவி



யின் துக்கத்தைப் பார்த்துச் சகிக்க முடிய வில்லை. அரசன் மேல் கடுங்கோபம் மேலிட்டுப் பேச ஆரம்பித்தான்.

"கொடும் பாதகங்கள் செய்த துன்மார்க்கர்களுக்கு விதிக்கும் தண்ட னையை ராமசந்திரனுக்கு இந்தக் கிழ அரசர் விதித்திருக்கிறார். என்ன குற்றம் ராமன் செய்தான் என்று கண்டு இந்தப் பிராயச்சித்தத்தை விதித்தார்? விரோதி களில் கூட எவனும் ராமன் பேரில் ஒரு குற்றம் சாற்றினதில்லை. மூடனாய்ப் போனார் நம்முடைய தந்தை. கிழ வயதில் காதலின் காரணமாகப் புத் தியை இழந்தார். இவர் அரசராக இருக்க இனித் தகுந்தவரல்ல. ஸ்திரீயின் பேச் சைக் கேட்டு அதருமம் செய்யும் ஒருவர் எப்படி அரசராக இருக்கலாம்? பகைவர் கள் கூட உன்னைக் கண்ட மாத்திரத்தில் உன் மேல் அன்பு செலுத்துவார்கள். உன்னை வனம் போகச் சொல்லுகிறார் மூடர். அண்ணா! நீயும் நானும் சேர்ந்து இவரைத் தகர்த்து விட்டு ராஜ்யத்தை இன்று முதல் ஆள்வோம். யார் நம்மை எதிர்க்கத் துணிவார்கள்? எதிர்க்கத் துணிந்தவர்களை ஹதம் செய்வேன். நீ எனக்கு அநுமதி கொடுத்தால் போதும்.



# ராஜாஜி

நான் ஒருவனே பார்த்துக் கொள்ளு கிறேன். பரதன் ராஜ்ய பதவிக்கு வரு வதாம், நீ வனம் புகுவதாம்! உலகம் சிரிக்கும். இதற்குச் சம்மதிக்க வேண் டாம். நான் இதைப் பொறுத்துக் கொண் டிருக்க முடியாது. நம்மை எதிர்ப்பவர் களை ஹதம் செய்து விட்டு, எந்த இடைஞ்சலுமில்லாமல் நீ ஆட்சி புரிந்து வரும்படி நான் பார்ப்பேன். இந்தச் சக்தி எனக்கு உண்டு. சூரியன் உதிப்பதற்குப் பதிலாக பெரிய இருள் உதயமாகி விட்டது. பட்டாபிஷேகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, வன வாசம் என்கிறார் அரசர். இந்த அதரு மத்தைப் பொறுத்துக் கொண்டு நய மாகப் பேசுவதில் பயனில்லை. என் னால் இதைச் சகிக்க முடியாது. என் தருமத்தை நான் நடத்தியே தீருவேன். அம்மா, நீ பார்! ராமா, நீயும் பார் என் சக்தியை!" என்றான்.

லக்ஷ்மணன் சொன்னது கௌசல் யைக்கு ஆறுதல் தந்தது. ஆயினும் புரு ஷனை ராஜ்யாதிகாரத்தினின்று நீக்கி விட்டு, ராஜ்யத்தை ஆக்கிரமிப்பது முதலிய, அதற்கு முன் என்றும் கேளாத பேச்சுக்களைக் கேட்டுப் பயந்தாள்.

"ராம! லக்ஷ்மணன் சொல்வதை யெல்லாம் சரியாக ஆலோசித்துப் பார். காட்டுக்குப் போக வேண்டாம். போனால் நான் தனியாக எப்படி இங்கே சத்துருக்களிடையில் இருக்க முடியும்? உன்னுடன் நானும் வந்து விடுகிறேன்!" என்றாள்.

தம்பி சொன்னதைச் சாந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் ராமன். லக்ஷ்மணனுடைய ரோஷம் பொங்கி வடிய வேண்டும்; அதை முற்றிலும் அடக்க இயலாது என்று எண்ணிக் கோபம் தீரப் பேச விட்டான்.

பிறகு கௌசல்யா தேவியை நோக்கி, "தாயே! என்னுடன் யாரும் காட்டுக்குப் போகும் பேச்சு வேண் டாம். வயோதிக அரசருக்கு நீங்கள் சுச்ருஷை செய்து கொண்டு பொறுமை யுடன் இங்கேயே இருப்பது உங்கள் கடமை. மகாராஜனைப் புருஷனாகக் கொண்ட பட்டமகிஷி எவ்வாறு புரு ஷனை இழந்த ஒரு ஸ்திரீயைப் போல் வனத்துக்கு என் கூட வரலாம்? அது

தகாது. நான் வனவாசம் முடிந்து திரும்பி வரப் போகிறேன். எல்லாரும் சுகமாகப் பல்லாண்டு வாழ்வோம். தந்தையின் வாக்கு தருமமோ அதருமமோ, சுயமாகச் சொன்னதோ, பிறர் சொல்லக் கேட்டு மோசம் போய்ச் சொன்னதோ, எப்படியாயினும் சரி, அதைச் சிரமேற்கொண்டு நிறைவேற்று வது என் கடமை. இந்தத் தருமத்தை நான் புறக்கணித்து விட்டு எந்தப் பொருளைப் பெற்றும் எந்தப் பதவியை வகித்தும் சுகமோ புகழோ பெற முடி யாது. லக்ஷ்மணா, நீ சொல்லும் யோசனை முற்றிலும் தவறு. உன் சக்தியை நான் அறிவேன். சந்தேகமே யில்லை. எல்லாரையும் தோற்கடித்து ஹதம் செய்து எனக்கு நீ ராஜ்யம் சம் பாதித்துக் கொடுப்பாய். என் மேல் உனக்கு இருக்கும் அன்பும் எனக்குத் தெரியும். ஆனால் அது நம்முடைய வம்சத்துக்குத் தகாது. பித்ரு வாக்குப் பரிபாலனம் என்பது சிறந்த தருமம். அதை இழந்து வேறு எதைச் சம்பாதித் தாலும் ஈடு ஆகாது.''

இவ்வாறு இருவரையும் சமா தானப்படுத்த முயன்றான் ராமன். லக்ஷ் மணனுடைய கோபம் அவ்வளவு சுலப மாகத் தணியுமா? தன்னைப் பற்றிய விஷயமாக இருப்பின், ஒருவேளை கோபம் எளிதில் தணியும். ராமனுக்கு இந்தத் துக்கம் கொஞ்சமும் காரண மின்றி மிக அநியாயமாய் நேர்ந்ததே என்கிற கோபம் அவனை விட்டு அகல வில்லை. படம் எடுத்துச் சீறும் நாகப் பாம்பைப் போல் கண்களினின்று கோபப் பொறிகள் பறந்து கொண் டிருந்த லக்ஷ்மணனைத் தனியாக உட் கார வைத்து ராமன் நிதானமாகப் பேசி னான்.

"தம்பி, எனக்கு நீ வெளியில் நட மாடும் உயிரல்லவா? நான் சொல்லு வதைக் கேள். நீ தைரியசாலி. உன் கோபத்தையும் என்னைப் பற்றிய துக்கத்தையும் நீ அடக்கியாள வேண் டும். அது உன்னைப் பிடித்துக் கொண்டு வெறியாட்டமாட இடம் கொடுக் காதே. தருமம் என்பதைப் பலமாகப் பற்றிப் பிடித்து இப்போது ஏற்பட்ட அவமானத்தை ஒரு பெரிய சந்தோஷ மாக மாற்றுவோம். பட்டாபிஷேகத்தை முற்றிலும் மறந்து விட்டு, நம் கருத்தை யெல்லாம் வேறு துறையில் செலுத்து வோம். நம்மைப் பெற்ற தந்தையின் நிலை இப்போது என்ன என்பதை நன் றாக ஆலோசிப்போம். அவருக்கு ஏற் பட்டிருக்கும் பயம் என்னவென்பதை நாம் உணர்ந்து நடந்து கொள்ள வேண் டும். எந்தக் காரணத்தைக் கொண்டோ கொடுத்து விட்ட ஒரு வரத்தை இல்லை யென்று இப்போது சொன்னால் அசத்தியத்தில் இறங்கினதாகும்; பாபம் வந்து சுற்றிக் கொள்ளும்; இதுவரையில் அவர் நடத்திய சகல தருமமும் தானமும் புண்ணிய கருமங்களும் பயனின்றிப் போகும். இந்தப் பெரும் பயத்தினால் நம் தந்தை வேதனைப்படுகிறார். அவ ருடைய பயத்தைத் தீர்ப்பதல்லவோ நம் முடைய கடமை? என்னைப் பற்றி வருந்துகிறார். எனக்கு வருத்தம் கொஞ்சமுமில்லை, உனக்கும் வருத்த மில்லையென்று அவருடைய சந்தே கத்தை முற்றிலும் போக்கி, அவருக்கு நாம் வழி ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். நமக்கு உயிர் கொடுத்த தந்தையின் பயத்தைப் போக்கி, அவர் மனம் நிம்மதியடையச் செய்வது புத் திரர்களாகிய நம்முடைய கடமை. பர லோகத்தைப் பற்றி நம்முடைய தந்தை பயப்படுகிறார். அந்தப் பயத்தை நாம் போக்க வேண்டும். இதுவரையில் நாம் அவருக்கு எள்ளளவும் துக்கமோ அதிருப்தியோ தந்ததில்லை. இப்போது நாம் அவர் பரலோகத்தைக் குறித்துப் பயப்படுவதற்குக் காரணமாகி விட் டோம். அதைச் சுலபமாக நாம் தீர்க்க லாம். அப்படிச் செய்யாமல் அவ ருடைய சங்கடத்தை அதிகப்படுத்த லாமா? இந்தக் காரணத்தினால், லக்ஷ்மணா, பட்டாபிஷேகத்தைப் பற்றி முற்றிலும் என் மனம் விலகி, வனம் போவதிலேயே ஈடுபட்டு விட்டது. நான் காட்டுக்குப் போய் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதே என் னுடைய ஆசையும் மகிழ்ச்சியுமாகி விட்டது. இதைத் தாமதப்படுத்தினால் கைகேயிக்குச் சந்தேகம் உண்டாகும். ஆனபடியால் இன்றே வனம் சென்று அவளுடைய மனம் நிம்மதியடையச் செய்ய வேண்டும். சத்தியப் பிரதிக்ஞை யைப் பற்றிய பயம் தீர்ந்து போய் நம் தந்தை சுகமாக இருப்பார். நான் துயர மடைவேன் என்றல்லவா அவர் வேதனைப்படுகிறார்? எனக்குக் கொஞ் சமும் துக்கமில்லை என்று அவருக்குத் தெளிவானால் அவருடைய வேதனை அவரை விட்டு விலகும். இதனாலே தான் நான் அவசரப்படுகிறேன்.

அடுத்த இதழில்...

●● தண்ணீர்ப் பஞ்சத்தில் திணறும் சென்னை!
- கவர் ஸ்டோரி

கைகேயியைப் பற்றி நாம் கோபித்துக் கொள்ளக் கூடாது. நம்மிடத்தில் அவள் இதுவரையில் எவ்வளவு பிரீதி வைத்திருந்தாள்! திடீர் என்று இம்மாதிரியான எண்ணம் அவளுக்கு உண்டானது விதியின் காரியம். நாம் அவளை நிந்திக்கலாகாது. மக்கள் ஏதேதோ சங்கற்பம் செய்வார்கள். ஆனால் விதி வேறு விதமாகத் தீர்த்து விடுகிறது. இது கைகேயினுடைய காரியமே அல்ல. விதி அவளை ஒரு அறிவில்லாத கருவியாகப் பயன்படுத்தியிருக்கிறது. பழியைச் சுமக்கும் துக்கம் அவளுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. அவளிடத்தில் நாம் வைத்து வந்த அன்பு அப்படியே இருக்க வேண்டும். வஞ்சக எண்ணம் அவள் உள்ளத்தில் முந்தியே இருந்திருந்தால் அவள் நடவடிக்கை வேறுவிதமாக இருந்திருக்கும். திடீர் என்று இந்த விதம் நிர்த்தாட்சண்யமாக 'ராமனே, நீ வனம் செல்!' என்று அவள் தன் வாயாலேயே சொல்லுவதற்குக் காரணம் தெய்வச் செயலே, சந்தேகமில்லை. அவள் மேல் நாம் கோபம் கொள்ளலாகாது. அவள் எவ்வளவு மேன்மைக் குணம் பொருந்தியவள். நம்மைப் பெற்ற தாயைப் போல் பார்த்து வந்தவள்! எவ்வளவு பண்பாடு அடைந்தவள்! புருஷன் எதிரில் இம்மாதிரி கூச்சமின்றி ஏன் நடந்து கொண்டாள்? இதற்குத் தெய்வத்தின் செயலல்லாமல் வேறு காரணமிருக்க முடியாது. விதியை யார்தான் எதிர்க்க முடியும்! மகா தீரர்களான ரிஷிகள் கூடத் தங்கள் தவத்திலிருந்து திடீரென்று வழுவிப் போயிருக்கிறார்கள். தெய்வத்தால் வந்ததை எதிர்க்கும் ஆற்றலைக் கைகேயி எப்படிப் பெறுவாள்? நம்முடைய மனோதைரியத்தால் இந்த அனர்த்தத்தை நாம் சந்தோஷ நிகழ்ச்சியாகச் செய்து விடுவோம். அதுவே நம்முடைய வீரத்துக்கு அடையாளம். லக்ஷ்மணா, வனம் செல்லுவதற்கு முறைப்படி சங்கற்பம் செய்து பெரியோர்களுடைய ஆசியைப் பெற்றுக் கொண்டு நான் உடனே போக வேண்டும். தாமதம் கூடாது. அபிஷேகத்துக்கென்று கொண்டு வந்திருக்கும் கங்கை ஜலத்தைக் கொண்டு வா! அதையே வனவாச விரத சங்கற்பத்துக்கு உபயோகித்துக் கொள்ளுகிறேன். இல்லை! வேண்டாம்! அந்த ஜலம் பட்டாபிஷேகத்துக்கு உபயோகப்பட வேண்டிய ராஜாங்கப் பொருள். அதை நாம் எப்படித் தொடலாம்? நாமே கங்கை சென்று ஜலம் கொண்டு வருவது நலம். தம்பி, விசனப்படாதே. ராஜ்யம், சம்பத்து இவற்றைப் பற்றிச் சிந்தனை செய்யாதே. வனவாசமே எனக்கு மேன்மையான பாக்கியம். நம்முடைய சிறிய அன்னை பேரில் கோபிக்க வேண்டாம். அபிஷேகக் காரியங்களைத் தடுத்தது அவளல்ல. தெய்வம் வகுத்ததை அவள் பேரில் போடலாகாது.'' இவ்வாறு ராமன் சாந்தமாகத் தம்பிக்குத் தன் அந்தராத்மாவின் கருத்தை விவரமாக எடுத்துச் சொன்னான்.

இந்த இடத்திலெல்லாம் வால்மீகி உபயோகித்திருக்கும் பதம் ''தைவம்'' என்பது. சம்ஸ்கிருத இலக்கியங்களில் ''தைவம்'' என்றால் ''விதி'' என்று பொருள். தைவம், திஷ்டம், பாக்யம், நியதி, விதி இந்தப் பதங்களெல்லாம் எதிர்பாராததும் காரணமறியாததுமான நிகழ்ச்சிக்கு ஒரு பொருள் கொண்ட பல மொழிகள். தன்னுடைய முயற்சி அல்லது பிறருடைய சூழ்ச்சியல்லாது நிகழும் நிகழ்ச்சியை இந்தப் பெயர்கவிட்டுச் சொல்வார்கள். 'எல்லாம் ஈசு

வரனுடைய செயல்' என்கிற கொள்கையினால் 'விதி'க்கும் ஈசுவர ஸங்கல்பத்துக்கும் கொஞ்சம் குழப்பம் ஏற்படுவது இயற்கை. ஆனால், ராமன் இந்தச் சந்தர்ப்பத்தில் தம்பிக்குச் செய்த உபதேசத்தில் கைகேயினுடைய காரியத்தைத் தேவர்கள் தங்களுக்காகச் செய்த சூழ்ச்சி என்று அறிந்து சொல்லவில்லை. சாதாரண மக்கள் வாழ்க்கையில் ''விதியால் நடந்தது; வருத்தப்படாதே; யார் பேரிலும் குற்றம் சொல்லுவதற்கில்லை'' என்று ஆறுதல் சொல்லுவது போல் சொன்னான். அவ்வளவே.

கம்பராமாயணத்திலும் 'யாவராலும் மூட்டாத காலக்கடைத் தீயென மூண்டெழுந்த' இளையோனைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்:

நதியின் பிழையன்று
நறும்புன லின்மை அற்றே
பதியின் பிழையன்று
பயந்து நமைப் புரந்தான்
மதியின் பிழையன்று
மகன்பிழை யன்று, மைந்த!
விதியின் பிழைநீ இதற்கு
என்னை வெகுண்ட
தென்றான்.

**ரா**மன் சொன்ன சமாதானம் தம்பியின் கோபத்தைக் கொஞ்ச நேரம் அடக்கிற்று. ஆனால் மறுபடியும் மிக வேகத்துடன் கோபம் பொங்கி விட்டது. ''இது விதியின் வேலை. சிற்றன்னையின் மதி கெட்டதற்கு அது காரணமாயிருக்கலாம். ஒப்புக் கொள்ளுகிறேன். அவளை நான் கோபிக்கவில்லை. ஆனால் விதியினால் அனர்த்தம் நடந்து விட்டது என்று சும்மா இருந்து விடலாகாது. அனர்த்தத்தைச் சீர்ப்படுத்தி நியாயத்தை ஸ்தாபிப்பது க்ஷத்திரியனுடைய தருமம். வீர புருஷன் விதிக்கு அடங்கிப் போவதா? ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று நகரமும் நாடும் பறைசாற்றி விட்டு, எப்போதோ கொடுத்து மறந்து போன வரங்களை இப்போது கிளப்பி, உன்னைக் காட்டுக்குப் போ என்று ஒரு வஞ்சகர் உத்தரவிட்டால் அதை விதி என்று எடுத்துக் கொண்டு அடங்கிப் போவது புருஷ லக்ஷணமல்ல. கீழ்வகை ஜனங்களே விதிக்குத் தலைவணங்குவார்கள். நம்மைப் போன்ற வீரர்கள் விதியை எதிர்த்து வெற்றி பெற வேண்டும். வீரியமில்லாதவர்களே விதிக்குத் தலை வணங்குவார்கள். நான் அப்படிச் செய்ய முடியாது. இன்று பார்ப்பீர்கள் விதியின் பலத்துக்கும் வீர புருஷனுடைய பலத்துக்குமுள்ள வித்தியாசத்தை. விதி என்கிற மத யானையை நான் அடக்கித் திருப்பிக் கொண்டு வரப் போகிறேன். உம்மை வனம் செல்லும்படி சூழ்ச்சி செய்தவர்களையே காட்டுக்கு நான் அனுப்பப் போகிறேன். உமக்கு வனம் போகும் ஆசை இருந்தால் அதைப் பிறகு நிறைவேற்றிக் கொள்ளலாம். அதற்குத் தகுந்த காலம் உண்டு. பல்லாண்டு ராஜ்யத்தை ஆண்டு நம்முடைய முன்னோர் செய்து காட்டியபடி ராஜ்யத்தைப் புத்திரர்களிடத்தில் ஒப்புவித்து விட்டு வனம் சென்று தவம் செய்யலாம். இப்போது உம்முடைய ஆட்சியை யாரேனும் எதிர்த்தால் அவர்களைத் தொலைத்து விட நான் இருக்கிறேன். என் இரு புயங்களை அழகுக்காகவா பெற்றேன்! இந்த வில்லும் இந்த பாணங்களும் இடுப்பில் தொங்கும் இந்தக் கத்தியும் அலங்காரத்துக்கா? அல்லது இவை நாடக மேடை வேஷச் சாமான்களா? நான் உம்முடைய வேலைக்காரன். உத்தரவு தர வேண்டும். பிறகு பார்க்கவும், இந்த வேலைக்காரனுடைய வேலையை!''

இவ்வாறு மறுபடியும் கொழுந்து விட்டெரியும் தீ போல் கிளம்பிய லக்ஷ்மணனுடைய ஆத்திரத்தை ராமன் மெதுவாகத் தணித்தான்.

''நம்முடைய பெற்றோர் உயிருடன் இருக்கும் வரையில் அவர்களுடைய சொற்படி நடப்பது நம்முடைய கடமை. பிதாவின் கட்டளையை மீறும் காரியம் என்னால் முடியாது. அவர் சொன்ன சொல்லை நிறைவேற்றித் தந்து அவரை சத்திய பிரதிக்ஞராக்குவது நம்முடைய முதல் கடமை. பெற்றதாய் தந்தையரை அவமதித்து, தருமமே உருவமான பரதனையும் கொன்று விட்டா ராஜ்யத்தைச் சம்பாதிப்பது? அப்படிச் செய்து விட்டாலும் அதனால் ஏதேனும் சந்தோஷம் அடைய முடியுமா? நான் சொல்லுவதைக் கேள்'' என்று சொல்லி லக்ஷ்மணனுடைய கண்ணில் பெருகிய கண்ணீரைக் கையால் துடைத்துச் சமாதானப் படுத்தினான்.

**ரா**மபிரான் தன் கையால் கண்ணீரைத் துடைத்த பிறகும் கோபம் நிற்குமா? லக்ஷ்மணன் சாந்தமானான்.

(தொடரும்)

# அன்புள்ள அருண் கண்மணி,

அப்பா உன்னைப் பிளானடேரியம் பார்க்க அழைச்சுக்கிட்டுப் போனது பற்றி ரொம்ப சந்தோஷம். அங்கே எத்தனையோ புது விஷயங்களைக் கத்துக்கிட்டிருப்பே... எப்பவுமே நாம இருக்கிற இடத்தை விட்டு இன்னொரு இடத்துக்குப் போனா, போகிற வழியிலேயும் சரி, அந்தப் புது இடத்துலேயும் சரி... நிறைய விஷயங்களைத் தெரிஞ்சுக்க முடியும்.

இதனால்தான் ஸ்கூல்லே கூட மஹாபலிபுரம், காஞ்சிபுரம் மாதிரி இடங்களுக்கு உங்களை அழைச்சுக்கிட்டுப் போறாங்க. பெரிய கிளாஸுக்குப் போனால் இந்தியா முழுக்க சுற்றிப் பார்க்க அழைச்சுட்டுப் போவாங்க. இன்னும் பெரியவனானால் நீயே உலகம் முழுக்க சுத்திப் பார்க்கலாம்!

ஒரு வேடிக்கை தெரியுமோ? ஆதி நாளில் நம்மை மாதிரி மனுஷங்க ஒரு இடத்துல வீடு கட்டிக்கிட்டு குடியிருக்கலை. கோஷ்டி கோஷ்டியா சேர்ந்துக்கிட்டு சாப்பாடும், தண்ணியும் கிடைக்கிற வெவ்வேறு இடங்களுக்கு மாறி மாறிப் போய்க்கிட்டேயிருந்தாங்க. அதுவும் நடந்தே போனாங்க....! ரொம்ப வருஷங்களுக்கு இப்படியே வாழ்ந்த பிறகுதான் அவங்களுக்கு நாகரிகமா ஒரு இடத்துல வீடு கட்டிக்கவும் விதைகளைச் சேர்த்து வைச்சுப் பயிர் செய்யவும் தெரிஞ்சுது.

இப்போ நாமெல்லாம் இருக்கிற இடத்திலிருந்தே சாப்பாடு, துணிமணி, தண்ணீர் இன்னும் என்னென்னவோ வசதிகளை அனுபவிச்சுக்கிட்டிருக்கோம். ஆனால், ஒரு மாறுதலுக்காக ஜாலியா - பெட்டி படுக்கையைக் கட்டிக்கிட்டு வேற ஊருக்குப் போறோம்!

ஏப்ரல் மாசம் பரீட்சை முடிஞ்சு பெரிய லீவ் விடும் போது அப்பா, அம்மா உன்னையும் பப்லுவையும் ஏதாவது புது ஊருக்கு அழைச்சுக்கிட்டுப் போவாங்க இல்லையா...? 'ஐயோ! அதுவரைக்கும் காத்திருக்கணுமே'ன்னு உனக்குத் தோணுது!



கவலைப்படாதே,
பரீட்சைக்குப் படிச்ச நேரம் போக மீதி நேரத்தில் பப்லுவும் நீயும் கூடத்து ஊஞ்சலில் ஏறி உட்கார்ந்துக்க வேண்டியதுதான். அந்த ஊஞ்சலை ஆட்டினால் பாம்பே, டெல்லி, கல்கத்தான்னு எல்லா ஊருக்கும் நீங்க போயிட்டு வந்துடுவீங்கன்னு எனக்குத் தெரியுமே!

அன்பு அத்தை,

# பட்ஜெட் எப்படி இருக்கும்?

● அரங்க வேங்கடேசன், சிதம்பரம்.

? 'அயோத்தி பிரச்னையை நான்கு ஆண்டு களுக்குப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று பிரதமர் கூறியுள்ளதன் உள்ளர்த்தம்?

! நாலு ஆண்டுகளுக்குள் இவர் பதவிக் காலம் முடிந்து தேர்தல் வந்து விடும். 'அப்புறம் பதவிக்கு வருகிறவன் சிண்டைப் பிய்த்துக் கொள்ளப் பிரச்னைகள் சில வற்றை விட்டு வைத்து விட்டுப் போக வேண்டாமா' என்ற கருணை காரணமாக இருக்கலாம்!

● த. ரவீந்திரன், புதுவண்டிப்பாளையம்.

? 'தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்' என்கிற பெயரை 'தமிழ் நாட்டுப் பாட நூல் கழகம்' என்று முதல்வர் மாற்றியுள்ளாரே? அதனால் அரசுக்குப் பெரிதாய் ஏதும் லாபம்...?

! அரசுக்கு ஒரு லாபமும் இல்லை. ஆனால், 'பாடநூல் நிறுவனம்' என் னும் போது அரசு இலாக்கா போல் தொனிக்கிறது; 'கழகம்' என்று மாற்றி விட்டால் கழற்றி விடப்பட்ட தாகி விடும்' என்று எண்ணுகிறார் போலும். இந்தப் பெயர் மாற்றத்தால் அவர் மீது சுமத் தப்பட்டுள்ள குற்றச்சாட்டு பலவீன மடைந்து விடாது. 'கழகம்' என்றாலும் 'நிறுவனம்' என்றாலும் ஜெயா பப்ளிகே ஷன்ஸ் குற்றச்சாட்டுக்குப் பதில் கூற வேண் டிய நிலையில்தான் உள்ளது.

● மல்லிகை மன்னன், மதுரை.

? "ராஜீவ் காந்தியின் படு கொலைக்கு மத்திய அரசுதான் பொறுப்பேற்க வேண் டுமே தவிர தமிழக கவர்னர் ராஜினாமா செய்ய வேண்டிய அவசியமில்லை" என்று சொல்கிறாரே வாழப்பாடியார்?

! அன்றைய தினம் மத்திய அரசின் பிரதிநிதி யாக இங்கே ஜனாதிபதி ஆட்சி நடத்தி வந் தவர் ஆளுனர்தான் என்பதால்தான் அவரது ராஜினாமா கோரப்படுகிறது. இது வாழப் பாடியாருக்குத் தெரியாதது அல்ல; ஆனால் 'ஆளுனர் ராஜினாமா செய்தால் தாமும் பதவியை ராஜினாமா செய்ய வேண்டியிருக் குமே' என்று யோசிக்கிறார். 'ராஜீவ் படு கொலைக்கு காங்கிரஸ் கட்சியும் பொறுப் பேற்க வேண்டும்' என்றுதான் வர்மா கமிஷன் அறிக்கை சொல்கிறது. ஆட்சியின் தவறுகள் மட்டுமின்றி கட்சியின் தவறு களும் பட்டியலிடப்பட்டுள்ளன.

● எஸ். சந்திரா, மதுரை.

? கிருபானந்த வாரியார் 64வது நாயனா ராக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறாரே?

! வாரியார் சுவாமிகளுக்கு இதெல்லாம் தேவையற்றது. அவரது ஆன்மீகப் பணி அனைவரும் அறிந்தது. நாயன்மார் 63 பேர் இருக்கலாம்; எனக்குத் தெரிந்து ஒரே ஒரு வாரியார் சுவாமிகள்தான் இருக்க முடியும். அவரது பல்வேறு சிறப்புப் பணிகளில் 63 நாயன்மார்கள் குறித்து "சிவனருட் செல்வர்" என்று நூல் எழுதியதும் ஒன்று.

● வி. பரமசிவம், மதுரை.

? 'ரேஷன் அரிசி விலை உயர்வுக்கு மத்திய அரசுதான் காரணம்' என்று தமிழக உணவு அமைச்சர் விஸ்வநாதன் கூறியிருப் பது பற்றி?

! மத்திய அரசு, கட்டுப்படியாகும் விலைக் குத்தான் அரிசியோ கோதுமையோ மத்திய இருப்பிலிருந்து தர முடியும் என்கிறது. பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்தப் பல் வேறு இனங்களில் மான்யங்களைக் குறைத்து வருகிறது. ஆனால் அதே சமயம் நேற்று வரை இருந்த விலைக்கோ அல்லது அதைவிட மலிவாகவோ கூட மாநில அரசு ரேஷன் அரிசி விநியோகம் செய்வது பற்றி மத்திய அரசுக்கு ஆட்சேபணை ஏதும் கிடை யாது. எனவே விசுவநாதன் கூறியிருப்பது சரி என்றாலும் முற்றிலும் சரியல்ல. ரேஷன் அரிசி விலை உயர்வுக்கு மாநில அரசின் பொறுப்பும் பங்கும் நிச்சயம் உண்டு. 'நான் நிரபராதி; அவன்தான் குற்றவாளி' என்பது போல் ஓர் அமைச்சர் பொறுப்பைத் தட்டிக் கழித்துப் பேசுவது அழகல்ல. மத்திய அர சுக்கு உள்ளது போல் மாநில அரசுக்கும் நிதி நெருக்கடி இருக் கிறது; ஓரளவுக்கு மேல் மானியம்





✱ மத்திய அரசே காரணம்!

✱ பட்ஜெட் எப்படி?



✱ வேண்டாம் ராஜினாமா!

வழங்கி நஷ்டப்பட முடியாது என்பதே உண்மை.

● க. ஜெகன் செல்லையா, புது தில்லி.

? "ஜெயலலிதா அரசை டிஸ்மிஸ் செய்தால் அ.இ.அ.தி.மு.க. தொண்டர்கள் பிந்தரன்வாலேக்களாக மாறுவார்கள்" என்று காந்திராஜன் எம்.எல்.ஏ. பேசியுள்ளாரே?

! பிந்திரன்வாலேயை ஊக்குவித்து விட்டுப் பிறகு இந்திரா காந்தி வருத்தப்பட்டார் என்பது சமீப சரித்திரம். சரித்திரத்திலிருந்து பாடம் கற்க காந்திராஜன் மறுக்கலாம்; ஆனால் ஜெயலலிதாவோ, அ.தி.மு.க. தொண்டர்களோ கூட அப்படிப்பட்டவர்கள் அல்ல. மேலும் ஜெயலலிதா அரசு டிஸ்மிஸ் ஆவது பற்றி இவர்களேதான் பயத்துடன் பேசிக் கொண்டிருக்கிறார்களே தவிர, அந்த அதிகாரத்தில் உள்ளவர்கள் அப்படி எண்ணுவதாகத் தெரியவில்லையே!

● எம். பிரபு, குமராட்சி.

? அடக்கமான அரசியல்வாதி என்று யாரைக் கூறுவீர்கள்?

! கிளின்டனுக்கு தேர்தலில் பெரிதும் உதவி அவரது நம்பிக்கையைப் பெற்றிருந்தவர் திருமதி பயர்டு. அமெரிக்க நாட்டின் முதல் பெண் அட்டர்னி ஜெனரலாக (அரசாங்க வழக்குரைஞர்) அவரை கிளின்டன் அறிவிக்கிறார். இது டிசம்பர் 24ல். உடனே எஃப்.பி.ஐ. அவரது பூர்வோத்திரத்தை ஆராய்கிறது. பயர்ட் சில வரிகளைச் செலுத்தாமல் இருந்திருக்கிறார் என்பதாக எஃப்.பி.ஐ. அறிக்கை ஜனவரி 14ல் வெளியாகிறது. ஜனவரி 19ல் பயர்டும் கணவரும் வரி பாக்கியைச் செலுத்தி விட்டதாகவும் தவறுக்கு வருந்துவதாகவும் கூறுகின்றனர். ஆனபோதிலும் எதிர்ப்பு வலுக்க ஜனவரி 22ல் பயர்ட் தமது பெயரை வாபஸ் பெறுகிறார். கிளின்டன் வருத்தத்துடன் சம்மதிக்கிறார். இதுபோன்ற அடக்கமும் தார்மிகப் பொறுப்பும் நம் நாட்டில் யாருக்கு உண்டு? அதனால் யாரையும் இங்கு சுட்டிக்காட்ட முடியவில்லை. இங்கிருப்பவரெல்லாம் மலை முழுங்கி மகாதேவன்களாக மட்டுமின்றி கல்லுளிமங்கன்களாகவும் இருக்கின்றனர்!

● ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

? தியாகப்பிரும்மம் பாடிய ராமபக்தி சாம்ராஜ்யத்துக்கும் அத்வானி ஆர்ப்பரிக்கும் ராமர் கோயில் ராஜ்யத்துக்கும் என்ன வித்தியாசம்?

! ஆன்மீகத்துக்கும் அரசியலுக்கும் உள்ள வித்தியாசம்தான்.

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? வரும் பட்ஜெட் எப்படி இருக்கும்?



✱ ஆர்ப்பரிக்கும் ராஜ்யம்



✱ முழுமையான வாழ்க்கை

! எப்படி இருக்கும் என்று மன்மோகன் சிங்குக் குத்தான் தெரியும். ஆனால் எப்படி இருக்க வேண்டும் என்பது மட்டும் நமக்குத் தெரியும். சேமிப்பை நன்கு ஊக்குவிப்பதாக, முதலீடுகளுக்கு வழி வகுப்பதாக, தொழில் வளத்தையும் வேலைவாய்ப்பையும் பெருக்குவதாக, விலைவாசி உயர்வு நேராவண்ணம் பட்ஜெட்டில் பற்றாக்குறை மிக மிகக் குறைவாக இருக்க வேண்டும். அரசின் கவனம் கல்விபால் திரும்ப வேண்டும். தொழில், தொழில்துறையினரிடம் விடப்பட வேண்டும்.

✱ நிஜவுலகமா? கழகமா?

● ரகு, சென்னை.

? ஆட்ரி ஹெப்பர்ன் நடித்துப் பார்த்ததுண்டா?

! மெரிலைன் மன்றோ போன்றவர்கள் உடல் கவர்ச்சிக்கு முக்கியத்துவம் தந்து அதன் மூலம்தான் பிரபலமடைய முடியும் என்று நம்பிக் கொண்டிருந்த ஒரு காலகட்டத்தில், ஆட்ரி ஹெப்பர்ன் என்ற ஒல்லிச் சொக்கிப் பெண், ஒரு புன்னகையால் நெஞ்சை அள்ளலாம் என்று நிரூபித்தார். கள்ளமற்ற அகத்தின் அழகை முகம் பிரதிபலிக்க நடித்தார். 'ரோமன் ஹாலிடே', 'நன்ஸ் ஸ்டோரி' போன்ற பல படங்களில் அவரைப் பார்த்தவர்கள் கண்களுக்கு இணையான கவர்ச்சி உறுப்பு இல்லை என்று சத்தியம் செய்தனர். 'வெய்ட் அன்டில் டார்க்' என்ற படத்தில் அந்தப் பிரகாசமான கண்களையும் இழந்தவராக நடித்து பிரமிப்பில் ஆழ்த்தினார். ஒரு கட்டத்தோடு நடிப்புக்கு முழுக்குப் போட்டு சமுதாயப் பணி ஆற்றினார். அகால மரணம் அடைந்த ஆட்ரி ஹெப்பர்னின் வாழ்க்கை முழுமையானது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
த. ரவீந்திரன்,
22, எஸ். எஸ். கோயில் தெரு,
புதுவண்டிப்பாளையம்
கடலூர் - 607 004.



# அனுக்கிரகம்

**வி**ல்லுப்பட்டி எட்டு கி.மீ. என்ற போர்டைப் பார்த்ததுமே அம்மாவுக்கு உடம்பில் ஒரு சிலிர்ப்புப் பரவி, சட்டென்று குலுக்கிக் கொண்டாள்.

கிராமத்து ரோட்டுக்கே உரிய புழுதி. நெல் வாசனை, வேலி கட்டிய வீடுகள். எங்கள் வேனை வியப்போடு பார்க்கும் பார்வைகள். உள்ளூர எங்களுக்கும் புத்துணர்ச்சி பரவியது.

இந்த இரண்டு நாட்களும் எந்தவிதப் பரபரப்பும் இல்லை. நாளைக்குக் காலையில் கோவிலில் பூஜை. அபிஷேகம். அது முடிந்து கிளம்பும் வரை இயற்கையோடு ஒன்றி, நகரப் பரபரப்பு ஏதுமின்றி இருக்கப் போகிறோம்.

அம்மா ஏறக்குறைய சீட்டு நுனிக்கே வந்து விட்டாள்.

''அதோ.. இடது கைப் பக்கம் ரோடு சின்னதாப் பிரியுதே.. அதுலதான் திரும்பணும்.''

''ஒத்தையடிப் பாதை மாதிரி தெரியுதே..'' என்றேன் சந்தேகமாக.

''இல்லைடா.. வேன் போகலாம். போன வருஷம் போனோமே. இப்ப அகலமா ரோடு போட்டாக்க.''

பல வருஷங்களுக்கு முன் அம்மா பிறந்து வளர்ந்த ஊர். தாத்தா, பாட்டி குடும்பம் நடத்திய இடம். இன்று 'வீடு' என்று சொல்ல முடியாதபடி பங்காளிச் சண்டையில் சிதிலமாகிப் போன மண் சுவர்கள் மட்டுமே மிச்சம். புதர் மண்டி, வீட்டு வாசலில் எப்போதோ போட்ட சிமெண்டுத் தரை மட்டும் பழைய கனவுகளின் மிச்சமாய், முன்பு வீடு இருந்ததன் அடையாளமாய் இருக்கிறது.

சாலை வளைந்து வளைந்து போனது. செம்மண் அடித்த சாலை. மழை பெய்ததில் நிறைய குழிகள். வேனைப் பார்த்துத்தான் ஓட்ட வேண்டியிருந்தது.

தூரத்தில் கோவில் கோபுரம் தெரிந்தது.

''வ ர த ரா ஜா...'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டாள்.

''என்ன பாட்டி... கூப்பிடியா...'' என்றது என் மூன்று வயசு மழலை.

''..இ ல் லை டா... இந்தப் பெருமாள் பேரைத்தான் உனக்கு வச்சிருக்கு. ரொம்ப சக்திடா.. நினைச்சது நடக்கும்.. வேண்டினது கிடைக்கும்.''

அம்மாவுக்கு மறுபடியும் உடம்பு உதறியது சிலிர்ப்பில். பழைய கதைகள் மெல்ல மேலெழுந்தன மனசுக்குள்.

பூர்ணிமா பின்சீட்டில் கண்மூடி அமர்ந்திருந்தாள். கூடவே ஆறு வயது சிந்துஜாவும்.

சின்னவனுக்கு இந்தப் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று அம்மாவுக்கு ரொம்பப் பிடிவாதம். பூர்ணிமாவுக்குக் கொஞ்சம் அதில் வருத்தம்தான். நாகரிகமாய் ஒரு பெயர் தேர்ந்தெடுத்து வைத்திருந்தாள்.

அதையும் வை. ஆனா கூப்பிடறது.



ஸ்கூல்ல சேர்க்க, வரதராஜன்தான்... என்றாள் அம்மா.

'விடேன்... ஏதோ பேரு அடையாளம் புரிய...' என்றேன்.

நான் அந்த மாதிரி நழுவியதிலும் பூர்ணிமாவுக்கு வருத்தம்.

**"கோ**வில் இப்ப பளிச்சுனு ஆயிருச்சே!" என்றேன் வியந்து.

பழைய கோவில் போலவே தோற்றமில்லை இப்போது. பணம் விளையாடியிருந்தது. தற்போதைய டிரஸ்டி குழு பூரணமாய் வசூல் செய்து ராஜகோபுரம் புதுப்பித்து, ஊஞ்சல் மண்டபம் புதிதாய்க் கட்டி... புது மடப்பள்ளி, வாகன மண்டபம், புதுத் தேர் என்று கோவிலை முழுமைப்படுத்தியிருந்தார்கள்.

இதைத் தவிர, இந்த ஊர்க்காரர்கள் வெளியூர் போய்ச் செட்டில் ஆனாலும், தவறாமல் பணம் அனுப்புகிற ஏற்பாடுகள் வேறு.

தினசரி, மாத பூஜைகளுக்கு நிதித் திட்டங்கள், அதன் வட்டி என்று கைங்கர்யம் பூர்த்தியாக நடந்திருக்கிறது. நல்ல வேளை! 'அரசியல்' உள்ளே வராததால்... எந்த பிரச்னையும் இதுவரை இல்லை.

**"வா**ங்கோ... வாங்கோ..." என்று உற்சாக வரவேற்புக் கேட்டது.

சந்தானம்தான். ஒருவிதத்தில் எங்களுக்குத் தூரத்து உறவு. இப்போது கோவில் நிர்வாகம் இவருடைய பொறுப்பில் இருக்கிறது. எங்களின் இந்த இரண்டு நாட்கள், முழுமையான வசதியுடன் கழிய இவருடைய ஒத்தாசையும் அதிகம்.

"அதே வீடுதானா..." என்றாள் பூர்ணிமா பின்னிருந்து.

பழைய ஓட்டு வீடு ஒன்றில்தான் போன

ரிஷபன்

வருஷம் வந்தபோது தங்கினோம்.

"இல்லை... இப்ப நம்ம சந்துரு புதுசா வீடு கட்டியிருக்கான். சாவி இவர்கிட்டதான் இருக்கு. நாம அதுலேயே தங்கிக்கலாம். பாத்ரூம் டாய்லட் எல்லாம் இருக்கு..." என்றாள் அம்மா.

இனி அம்மாவுக்கு 'ஐமானி'களை கட்டி விடும். முன்பு தாத்தா காலத்தில் இங்கு கோலோச்சிய குடும்பம். எத்தனை கறவை மாடுகள், வயல்கள்... வேலை செய்ய ஆட்கள். எல்லாம் இழந்து, அப்பாவின் சொற்ப மாத வருமானம் - அதன் எல்லைக்குள் சிறகடிக்க வேண்டிய கட்டாயம் எல்லாம் அம்மா மீது திணிக்கப்பட்டது. கல்யாணம் ஆனதால்.

"நீ குப்பாதானே.." என்றாள் எதிர்ப்பட்ட ஒரு கிழவியிடம்.

வேனில் இருந்து இறங்கி மூன்று மணி நேர பயண அலுப்பிலிருந்து விடுபட்டுக் கொண்டிருந்தோம். சிந்துஜாவும், ராஜுவும் ஓட ஆரம்பித்தார்கள். விஞ்ஞானக் கறைகள் படியாத பிரதேசம்.

"ஆமாம்மா.. நல்லா இருக்கீங்களா.."

அம்மா பெருமிதமாய்த் தலையசைத்தாள்.

"உன் பேத்திய கட்டிக் கொடுத்துட்டியா?"

அம்மாவின் விசாரிப்புகளை ரசித்தபடி எதிரே தெரிந்த கோவில் குளத்தை நோக்கி நடந்தேன். கூடவே சந்தானமும்.

"இனிமே கவலையே இல்லை ஸார். வரதராஜன் ரொம்ப சக்தி. எல்லாரும் கொண்டு வந்து கொட்டறா. எல்லா உத்சவ



மும் பிரமாதமா நடக்கிறது. குளத்துல தெப்பம் கூட இந்த வருஷத்துலேர்ந்து நடக்கிறது..''

லேசான புன்சிரிப்புடன் கேட்டபடி நடந்தேன்.

''நீங்களும் வருஷந்தவறாம வரணும்... பூர்ணமா அனுக்கிரகம் வாங்கிக்கணும்...'' என்றார்.

பக்கத்தில் யாரோ அவரை அழைத்தார்கள். விடைபெற்றுப் போனார். குளத்து நீர் ஜில்லென்று என்னைத் தொட்டது. குழந்தை போல் அளைந்தேன்.

இரவு பிரசாதம் திருப்தியாக வயிற்றை நிறைக்க, திண்ணையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

பூர்ணிமா உள்ளே படுத்து விட்டாள்.

குழந்தைகள் இருவரும் இனுக இனுசான பூச்சிகளின் பறத்தலையும்.. ஏதேதோ சத்தங்களையும் வினோதமாய்ப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தன.

அம்மா என்னைப் பார்த்தாள்.

''அந்தப் பணத்தைக் கொண்டு வந்திருக்கியா...''

''ம்... நாலாயிரம்...'' என்றேன்.

''என்னமோ.. அஞ்ஞானம்.. நாம எவ்வளவு செஞ்சாலும் போறாது. ஏதோ நம்மால முடிஞ்சது...'' என்றாள்.

மாதா மாதம் என் வியாபாரத்தில் வரும் லாபத்தில் 'வரதராஜன்' ஒரு பங்கு. அம்மாவின் கட்டளை. ஒதுக்கியதை வருட இறுதியில் இந்த மாதிரி வரும் போது சமர்ப்பணம். இதுவே மூன்று வருஷமாய் நியதி.

என்னைக் கரிசனமாய்ப் பார்த்தாள்.

''படுத்துக்கோ... உனக்குச் சிரமமா இருக்கும். நீ ஒருத்தனே வேனை ஓட்டிண்டு வந்திருக்கே.''

படுத்துக் கொண்டு விட்டேன். அம்மா அருகில் யார் வீட்டுக்கோ பேசப் போனாள்.

!

காலையில் எங்களுக்கான விசேஷ அபிஷேகம், பூஜை முடிந்து விட்டது. நைவேத்தியம் முடியக் காத்திருந்தோம் வெளியே.

''ஏய்... நீ எலிதானே...'' என்றாள் அம்மா.

எதிரே கரேலென்று ஒருத்தன். மனசின் வெண்மை பளிச்சிட, அம்மாவைப் பார்த்து வெட்கமாய்ச் சிரித்தான்.

''நம்ம மருதுவோட புள்ளைதானே...''

''ஆமாம்மா...''

''ஏனோ உன் பேரே எனக்கு ஞாபகமில்லைடா. தப்பா நினைக்காதே...'' என்றாள்.

என் பக்கம் திரும்பினாள்.

''சின்ன வயசுல துருதுருன்னு ஓடு

வான். தாத்தா எலின்னு கூப்பிடுவா செல்லமா. அதுவே பின்னாடி பழகிப் போச்சு''
என்றாள்.

''என்னடா பண்றே...'' என்றாள் அவனிடம்.

''இருக்கேம்மா...''

''என்ன பண்றே... உன் தங்கை பேரு என்ன... ஆங்.. பூவாயி... கட்டிக் கொடுத்துட்டியா?''

சட்டென்று எலியின் முகம் இருண்டது.

''இல்லம்மா. அய்யாவுக்குப் பின்னால அப்புறம் சரியா... வேலை கிடைக்கலே. எதை எதையோ செஞ்சேன். இப்ப ஊர்லயும் யாரும் இல்லே. முன்னே மாதிரி பிழைப்பும் நடக்கலே.''

அம்மாவுக்கும் வருத்தம் அப்பிக் கொண்டது.

''கேட்கவே கஷ்டமா இருக்குடா...''

''அத வுடுங்கம்மா... நீங்க நல்லா இருக்கீங்களா... போன வருசம் குழந்தையா இருந்துச்சே.. அதானே...'' என்றான் வரதராஜனைப் பார்த்து பிரமித்து.

''உனக்கு இப்ப வேலையே இல்லையா...'' என்றாள் அம்மா மறுபடியும்.

''ஏதோ ஓடுதும்மா. அப்பல்லாம் எம்மாம் சோறு தருவீங்க.. அதெல்லாம் ஒரு காலம்...''

அம்மாவுக்கு மனசுக்குள் என்னவோ நிகழ்ந்திருக்க வேண்டும். அதற்குள் எங்களைத் தரிசனத்திற்குக் கூப்பிட்டார்கள். உள்ளே போனோம்.

தீபாரத்தி முடிந்து தட்டு வரும் போது பைக்குள் கை விட்டேன். அம்மா ஏனோ என்னைப் பற்றி இழுத்தாள் லேசாக.

''என்ன?''

''வேணாம்... இரு...''

''என்ன சொல்றே...?''

''அப்புறமாச் சொல்றேன்...'' என்றாள் கிசுகிசுப்பாக.

வெளியில் வந்தோம் மீண்டும்.

''யோசிச்சுப் பார்த்தேன்டா... பெருமாளுக்கு நாம எவ்வளவு வேணாச் செய்யலாம். அதுக்கு நிறைவே வராதுடா.. அவருக்கும் இப்ப நிறைய செய்யறா... அதனால...''

அம்மா என்ற தனி மனுஷியின் பூரணத்துவம் எனக்கும் லேசாக புலப்படத் தொடங்கியது.

''சொல்லும்மா...''

''எலிக்குக் கொடுக்கலாமா... தங்கை கல்யாணம், இந்த ஊர்ல ஒரு மளிகைக் கடைன்னு ஏதாச்சும் வழி காட்டலாம். ஒரு காலத்துல நம்ம வீட்டுக்கு ரொம்ப உழைச்சவங்கடா... ஏதாவது செய்யணும்னு எனக்குப் படறதுடா...'' என்றாள் கெஞ்சும் குரலில்.

அம்மாவை நமஸ்கரிக்க வேண்டும் போல் பரபரப்பு வந்தது எனக்குள்.

## சொல் விளையாட்டு – 1
## போட்டி முடிவு

சொல் விளையாட்டு கல்கி வாசகர்களுக்கு ரொம்ப எளிதாக இருந்திருக்கிறது. பல்லாயிரக் கணக்கில் விடைகள் வந்து குவிந்து விட, கொஞ்சம் தவித்துத்தான் போனோம். தவறான விடைகள் மிகவும் குறைவாகவே இருந்தன. அவற்றை ஒதுக்கி விட்டுக் குலுக்கலில் பின்வரும் பத்துப் பேர் தலா ரூ 25/– பரிசு பெறத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

1. வி.ஏ. வெங்கடேஷ், த/பெ வி. ஆவுடையப்ப பிள்ளை, 6/29, ஷண்முகத்தாய் பவனம், கீழரத வீதி, விளாத்திகுளம், வ.உ.சி. (மாவ) 627 907. 2. செல்வி சங்கர், 35-B முதல் குறுக் குத் தெரு, கட்டபொம்மன் சாலை, தீரன் நகர், திருச்சி - 620 009. 3. திருமதி விசாலாக்ஷி ஜெயராமன், 36, மூன்றா வது தெரு, போஸ்டல் காலனி, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033. 4. எம். ராமச்சந்திரன், 129 A என்.எல்.சி. ஆபீஸர் நகர், வடலூர் - 607 303. தெ. ஆ. (மாவ). 5. ஏ. ராமசாமி, *Assistant, ESI Stores, Office of the Director of Medical & Rural Health Services, DMS Compound, Madras - 6.* 6. திருமதி சுசித்ரா ரங்கராஜன், 771/F, *6th Block, Koramangala Layout, BANGALORE - 560 095.* 7. ஆர். வெங்கடாசலம், 15/89, குஞ்சுபள்ளிக் காடு, சங்கரி *(RS)* சேலம் (மாவ) - 637 302. 8. ஏ.ஜி. பிரமநாயகம், *C/o* பாபுலர் டிரான்ஸ்போர்ட், 131, வடக்கு பெருமாள் மேஸ்திரி வீதி, மதுரை - 625 001. 9. *D.* கவிதா, *S-21 F,* பொன்னம்பலம் சாலை, மேற்கு கே.கே. நகர், சென்னை - 78. 10. ஏ. திருமலை சாமி, *7/11A* கணக்குப் பிள்ளை வீதி, கண்ணம்பாளையம் (அஞ்சல்), சூலூர் (வழி), கோவை (மாவ).

நவரச

நினைவுகள் – 5

# பத்திரிகைகளின் பாராட்டும் திரையுலகின் கிண்டல்களும்

“ஏன்மா? நாளைக்கும் இதே மாதிரி பாப்பாவை விட்டுட்டு ஷூட்டிங்குக்குப் போய்டுவீங்களா?'' என்று கேட்டாள் லக்ஷ்மி.

''ஆமாம். இப்போ நடிச்சுக்கிட்டிருக்கிற சினிமா முடியற வரைக்கும் போகத்தான் வேணும். கொஞ்ச நாள்ல குழந்தை உன்கிட்ட பழகிடும் - அப்புறம் அழாது'' என்று லக்ஷ்மிக்குச் சமாதானம் கூறினேன்.

இப்படி சொல்லும்போதே எனக்கு கங்கம்மாவின் நினைவு வந்தது. எனக்குப் பாலூட்டிய செவிலித் தாய் கங்கம்மா. நான் பிறந்தவுடன் என் தாயாரின் உடல்நிலை பாதிக்கப்பட்டதால் அவரால் எனக்குப் பாலூட்ட முடியவில்லை. கங்கம்மாவோ தமது குழந்தையை இழந்து தவித்துக் கொண்டிருந்தார்.

மிகவும் ஆசாரமான எங்கள் குடும்பத்தில் கங்கம்மா வேற்று ஜாதியினள் என்பதைப் பொருட்படுத்தாமல், எனக்குப் பாலூட்ட அவரை அமர்த்தினார்கள். அப்படிச் செய்வதற்கு முன்னர் அவரை டாக்டரிடம் அழைத்துப் போய் மருத்துவப் பரிசோதனைகள் செய்ததோடு அவருக்கு நல்ல, ஊட்டச்சத்து மிக்க உணவு அளித்து கவனமாகப் பார்த்துக் கொண்டார்கள்.

பசி எடுக்கும்போதெல்லாம் 'அம்மா' என்று அழுவதற்குப் பதிலாக 'ங்கா' (என் பாஷையில் கங்கா) என்று அழுது நான் பசி தணித்துக் கொள்வேன் என்று என் அம்மா பின்னாளில் சொன்னதுண்டு. 'அதனால் தான் உனக்கு என்னிடம் ஒட்டுதல் இல்லை' என்று அம்மா என்னைக் கேலி செய்ததும் உண்டு!

கங்கம்மாவின் கனிவால் நான் கொழு கொழுவென்று வளர்ந்து, 'ஆரோக்கியமான குழந்தை' என்ற போட்டியில் முதல் பரிசு பெற்றேன்! ஆனால் என் குழந்தை யக்ஞப்ரபாவை, பசித்தபோதெல்லாம் தாய்ப் பாலூட்டி என்னால் வளர்க்க முடியவில்லையே என்ற மனப் போராட்டத்துக் கிடையே இரண்டாவது முறையாகக் கருவுற்றேன்.

சௌகார் பட ஷூட்டிங் பாதி முடிந்திருந்த சமயத்தில் ஒரு நாள்... எங்கள் வீட்டு வாசலில் ஒரு பச்சை நிறக் கார் வந்து நின்றது. பரபரப்புடன் வாசலுக்குச் சென்றேன். காரிலிருந்து ஜெமினி கணேஷ் இறங்கினார்.

வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக, ''என்னம்மா! ஜெமினி எடுக்கப் போகிற படத்தில் ஒரு 'ரோல்' இருக்கு. நடிக்கிறியா?'' என்றார்.

''கண்டிப்பா நடிக்கிறேன்'' என்று பதில் சொன்னேன். என்னை ஞாபகம் வைத்துக் கொண்டதற்கு நெகிழ்ச்சியுடன் நன்றி கூறினேன்.

''படத்தின் பெயர் 'மூன்று பிள்ளைகள்.' தமிழில் வனஜா என்கிறவர் நடிக்கிறார். அவர் பாத்திரத்தை நீங்கள் தெலுங்கில் செய்ய வேண்டும் - ஹீரோவாக ஸ்ரீராம் நடிப்பார்...'' என்றவர் ஷூட்டிங் தொடங்க கொஞ்சம் நாள் ஆகும் என்றும் தெரிவித்துப் போய் விட்டார்.

கொஞ்சம் நாட்கள் என்ன... ரொம்ப நாட்களாகியும் மூன்று பிள்ளைகள் படப்பிடிப்புக்கு அழைப்பு வரவில்லை. எனது இரண்டாவது குழந்தை - மகன் வெங்கடரமணா - பிறந்து விட்டான். பிரசவ செலவுக்கும் குடும்பச் செலவுக்குமாகச் 'சௌகார்' படத்துக்கு வாங்கிய ஊதியம் கரைந்து போய் விட்டது. என் உடல்நிலை மிகவும் பலவீனமாகயிருந்தது. எதிர்காலம் இரும்பவும் கேள்விக்குறியாகி விட்டது. 'வாய்ப்புக் கிடைக்குமா கிடைக்காதா...? சம்பாதிக்க முடியுமா முடியாதா?'

சென்னை, சித்ரா டாக்கீஸில் வெளியான சௌகார் படம் நல்ல வரவேற்பையும் விமர்சனங்களையும் பெற்றிருந்தது. என் நடிப்பை எல்லோரும் 'சுபர்ப்' என்று வர்ணித்த போது 'ஆண்டவனே அடுத்த வாய்ப்புத் தடையின்றி வர வேண்டுமே' என்று பிரார்த்தனை செய்தேன்.

பத்திரிகைகள் என் தோற்றத்தைப் பற்றி 'அடுத்த வீட்டுப் பெண் போன்ற அன்னியோன்ய உணர்வு ஏற்படுத்தும் இமேஜ்' என வர்ணித்து எழுதியிருந்தன. ஆனால் சினிமா வட்டாரத்தில் வேறு மாதிரி பேச்சு அடிபட்டது.

'ஹீரோயின் ரோலுக்கு ஒத்து வராத

சௌகார் ஜானகி



* முக்குரு கொடுக்குது (மூன்று பிள்ளைகள்)

தோற்றம்'

'உயரம் போதாது'

'கிளாமர் இல்லை'

'இவங்கள்லாம் பேசாமல் வீட்டி லேயே இருக்கலாம்...'

- இப்படி எத்தனையோ கமெண்டுகள்.

எனது திரையுலக வாழ்க்கையின் ஒவ் வொரு கட்டத்திலும் நான் பொறுமை யுடன் காத்திருந்துதான் வாய்ப்புக்களைப் பெற வேண்டி வந்துள்ளது. குறுகிய காலத் தில் சரேலென்று வளர்ந்து இடம்பிடித்துத் தக்க வைத்துக் கொண்ட நட்சத்திரம் அல்ல நான். போகப் போக இது ஒருவாறு பழகி விட்டது என்றாலும் ஆரம்பத்தில் அந்த மேடு பள்ளங்களைச் சலனமின்றி என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. குடும்பச் சூழ்நிலையும் அப்படி இருந்தது.

சௌகார் படத்துக்குப் பிறகு திரை யுலகில் என்னைப் பற்றி கடுமையாக விமர்சித்தவர்களுள் ஒருவர், அன்று கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்த டைரக்டர் கே. வி. ரெட்டி. அவர் விமர்சனத்தைக் கேட்டதும், 'பானுமதி அம்மா நம்மைப் பாராட்டிப் பேசி என்ன பயன்? சினிமா உலகம் புறக்கணிக்கிறதே!' என்று குமுறி னேன். அதே டைரக்டர் பின்னாளில் தமது விமர்சனத்தை வாபஸ் வாங்கிக் கொண்டு, என் முதுகில் தட்டிக் கொடுக்கவும் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. 'வெங்கடேஸ்வர மகத்யம்' என்ற படத்தில் வெங்கடேச பெரு மானே, குறிசொல்லும் ஒரு பெண்ணாக வந்து, பத்மாவதிக்குக் குறிசொல்லுவது போல ஒரு காட்சி. அதில் குறிசொல்லும் பெண்ணாய் வந்து, பாடுவது போல, ராகமாய் வசனம் பேசி நடித்ததைப் பார்த்து விட்டு, டைரக்டர் ரெட்டி, "நீ டயலாக் பேசுவது எம்.எஸ். பாடற மாதிரி இருக்கு; சபாஷ்!" என்று பாராட்டினார். அந்த அளவு பாராட்டுக்கு நான் தகுதியில்லாதவள் என்பதை உணர்ந்தாலும், வசனம் பேசு வதில் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்கிற ஆர்வத்தையும், ஊக்கத்தையும் அந்தப் பாராட்டு என்னுள் ஏற்படுத்தியது.

வெங்கட்ரமணா பிறந்து மூன்று வாரங்கள் கழித்து ஜெமினி ஸ்டுடியோவி லிருந்து ஷூட்டிங்குக்கு வரச் சொல்லிக் கூப்பிட்டார்கள். நிம்மதிப் பெருமூச்சுடன் வேலைக்குப் போகத் தயாரானேன்.

ஆனால், குறைந்த இடைவெளியில் இரண்டாவது குழந்தை பெற்றதாலும், சரி யான உணவு இன்றியும் மிகவும் இளைத் துப் போய் சோர்வுடன் இருந்தேன். ஷூட்டிங்கின் போது ஒருநாள் தலை கிறு கிறுவென்று சுற்றினதுதான் எனக்குத் தெரி யும்.

கண் விழித்தபோது, நான் நர்சிங் ஹோமில் இருந்தேன். செட்டில் மயக்கம் போட்டு விழுந்த என்னை, முதலுதவி அளித்தபின் நர்சிங்ஹோமில் அட்மிட் செய்திருந்தார்கள்.

இதனை அறிந்ததும் ஜெமினி அதிபர் எஸ். எஸ். வாசன் அவர்கள், என்னைக் கூப்பிட்டனுப்பினார்...!

பயத்துடன் போய் அவர் முன்னால் நின்றேன்.

(தொடரும்)

படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்

# சொக்க வைத்த அட்டைப் படம்!

## வட்டமேஜை

◆ 'குடியரசு தின குண்டுகள்' தலையங்கம் படித்தேன். சமூக விரோதிகளின் குண்டுவீச்சுக்காக, அவர்களைப் பிடித்துச் சட்டத்தின் முன் நிறுத்தி விடலாம். ஆனால் நமது அரசியல்வாதிகளின் வெகுஜன விரோதக் கொள்கை என்னும் குண்டுகளால் நிகழ்கால, எதிர்காலச் சமுதாயமே பாழாகும் அபாயம் இருந்தாலும் இந்த அரசியல்வாதிகளைச் சட்டம் ஒன்றும் செய்ய முடியாது. மீறி யாராவது அதிகாரிகள் செயல்பட்டால் இருக்கவே இருக்கிறது டிரான்ஸ்ஃபர் எனும் குண்டு!''

மதுரை - 16, வி. சிவா.

◆ 'குடியரசு தின குண்டுகள்' பற்றிய தலையங்கம் நாட்டு நடப்புகளைப் பற்றிய அருமையானதொரு மதிப்பீடு.

ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

◆ 'நடனமாடும் நீரூற்று' கவர் ஸ்டோரி கண்டேன். விஞ்ஞானத் துறையின் வியத்தகு வளர்ச்சி மெய்சிலிர்க்க வைக்கிறது. எழில்மிகு அட்டைப் படம் கண்டு சொக்கிப் போனேன்.

திருவட்டார், உமாகுமாரன்.

◆ கல்கத்தாவில் இசைக்குத் தகுந்தபடி நடனமாடும் நீரூற்று விக்டோரியா மெமோரியல் எதிரில் உள்ள பூங்காவில் இருக்கிறது. கட்டணம் ஒன்றும் கிடையாது. யாவரும் கண்டு களிக்கலாம்.

சென்னை - 17,

வசந்தா வேணுகோபால்

(மைசூர் பிருந்தாவனத்தில் இசைக்கு ஏற்ப நடனமாடும் நீரூற்று இருப்பதாகவும் சில வாசகர்கள் எழுதியுள்ளனர். ஆர்.)

◆ ஏரிகாத்த ராமர் கோவிலைப் பற்றிய படங்கள் தெய்வீக மணம் வீசின. பெயர் ஏற்படக் காரணமான விளக்கம் அருமை.

கோவை - 9, இ. கவுசல்யா.

◆ நாட்டு நடப்புகளை அப்பட்டமாகப் படம் பிடித்து காட்டியது, 'சுடுகின்ற நிஜங்கள்' சிறுகதை. இன்றைய அரசியல்வாதிகள் செய்கின்ற தவறுகளைத் துணிச்சலாகத் தட்டிக் கேட்டால் அதற்குக் கிடைக்கும் பரிசு, அடக்குமுறை அல்லது கலகமும் மரணமும்தான் என்பதை அருமையாகச் சுட்டிக் காட்டிய கதை, கதையல்ல; யதார்த்தம்.

திருச்சி - 17,

தென்னூர் எம். யாதவன்.

◆ 'சுடுகின்ற நிஜங்கள்' - கண்ணாடி போல் இன்றைய அவலத்தை அப்படியே பிரதிபலித்தது.

திண்டுக்கல் - 3,

வி. முருகபிரகாஷ்.

◆ 'கப்பு விடமா வேண்டாம்' என்ற சிறுகதை ஆடம்பரத்திற்கு ஓர் அதிர்வேட்டு!

கருமாபுத்தாளூர்,

ஆ. தங்கசாமி.

◆ நம் நாட்டுத் தயாரிப்புகளை மட்டமாகப் பேசுபவர்களுக்கு, எந்த நாடும் செய்ய முடியாத - மறை வைத்து நழுவா வண்ணம் செய்யப்பட்ட ''செராமிக்'' மூட்டு வகைகள் அவர்களின் முகத்தில் கரியை பூசி விட்டது. சபாஷ்!

திருச்சி - 6, தி. மா. தமிழ்முகன்.

◆ 'உறவின் இழைகள்' சிறுகதை அருமை. கதையோட்டத்திலும், கற்பனை வளத்திலும் மனதைப் பறிகொடுத்து, கதாபாத்திரங்களுடன் உறவாட வைத்து விட்டார் ஆசிரியர்.

சிதம்பரம், ஆர். ஆனந்தம்.

### பரிசுக் கடிதம்!

இந்த வாரன்ஸ் வின்சென்ட் பிழைக்கத் தெரியாத மனிதராக இருக்கிறாரே! இங்கிலீஷ் நோட்டுக்கும் கர்நாடக இசைக்கும் ஏற்ப நீரூற்றுகளின் நடனம் பூரணத்துவம் பெற ஆராய்ச்சிகளைத் தொடர்கிறாராமே! அதற்குப் பதில் -

அன்னையே! (ஒரு பெரிய ஊற்றும், அதன் அரவணைப்பில் சிறிய ஊற்றும்)

அகிலாண்டேசுவரியே! (வட்டம் முழுவதும் வியாபித்துப் பல சிறு ஊற்றுகள்)

ஓங்காரமானவனே! (திடீரென கட் அவுட் மாதிரி முப்பது அடி உயரத்துக்கு எழும் ஊற்று)

ஒளிவிளக்கே! (தொட்டியின் மையத்தில் பளிச்சென்று பிரகாசம்)

ஜெய, ஜெய, ஜெய, ஜெய ஹே! இத்யாதி... (பேரிகையின் கொட்டுதலுக்கேற்ப பல ஊற்றுகள் துள்ளி விளையாடுதல்)

சரணம், சரணம், சரணம்! (ஊற்றுகள் ஜான் உயரத்துக்குக் குறைந்து, பணிந்து அடங்குகின்றன)

இதுபோன்ற ஒரு பாடலுக்கு, இசையமைத்து, 'கோரியோகிராஃப்' செய்து, விண்ணப்பித்தால், அரசு அலுவலகங்கள், மருத்துவமனைகள், சுற்றுலாத் தலங்கள், கலாசாலைகள் எங்கும் ஆயிரக்கணக்கான 'செட்'கள் அமைக்க ஆர்டர் பெற்றுப் பணத்தை அள்ளிக் குவிக்கலாமே!

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.

THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | 1/2 % |
| 24 | 18 % | 1 % |
| 36 | 19 % | 1 1/2 % |
| 60 | 20 % | 2 % |

### HIGHLIGHTS:

- Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
- **Company is in 20th year of Service.**
- Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
- No tax deduction at source if the fixed deposit holders submits 15 H in case. For any financial year interest exceeds Rs. 2500/-.
- Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
- Pre-mature repayment facility as per terms and conditions
- Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
- Transaction with members only. (Rupees Two only for Membership.)

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | 1/2 % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| 1000 | 45 | 2025 | 1 1/2 % |
| 1000 | 67 | 3025 | 2 % |

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm 2.30 pm - 5 pm | 9 am to 12.30pm | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9am - 12.30pm 2.30 pm - 5 pm | 9 am to 12.30pm | TUESDAY |

**K. R. V. RAMANI**
President

**G. KUMARAVELU**
Vice-President

**P. S. SAMBASIVAM**
Secretary

